ஜெய் ஹிந்த்! ஜெய் ஹிந்த்!

# மகத்தான அறிவிப்பு

ஆர். சீனிவாசன்
(பாகவதர் பிக்சர்ஸ்)
அளிக்கிறார்

# "ஜெய் - ஹிந்த்"

(நேதாஜி போஸின் சரிதம்)



தமிழிலும், தெலுங்கிலும்
எல்லா பாஷைகளிலும்

நேதாஜியாக
ராஜா செங்கல்வராயன்
தோன்றுகிறார்

●

டைரக்ஷன்:
D. S. கோட்னிஸ் &
K. அருணாசலம்

●

கதை, வசனம், படக்கலை:
K. அருணாசலம்

— விவரங்களுக்கு: —

## பாகவதர் பிக்சர்ஸ்

தந்தி: 'Smart' H. O. கோயமுத்தூர்

# இண்டோ - கமர்ஷியல்

## 1946ஹ டிஸம்பர் 31உ

### பொறுப்புகள்.

| | ரூ. அ. பை. | ரூ. அ. பை. | ரூ. அ. பை. |
|---|---|---|---|
| **மூலதனம் :** | | | |
| **அதிகாரம் பெற்றது :** | | 25,00,000 0 0 | |
| **வெளியிடப்பட்ட — ரொக்கமாக செலுத்தப்பட்ட மூலதனம் :** | | 21,25,000 0 0 | |
| **கோரப்பட்டு, செலுத்தப்பட்டது :** | | 18,75,000 0 0 | 18,75,000 0 0 |
| ரிசர்வ் நிதி ... ... | | | 7,75,000 0 0 |
| கண்டிஞ்சென்ட் நிதி ... ... | | | 16,525 13 11 |
| வரிகளுக்கு ஒதுக்கியது ... ... | | | 76,182 15 0 |
| டிபாசிட்டுகள்:—பிக்சட், கரண்டு, சேவிங்ஸ் பாங்கு மாதாந்திர டிபாஸிட்டுகள் காஷ் சர்டிபிகேட், சிப்பந்தி செக்யூரிடி, நிதி முதலிய இதர பொறுப்புகள் ... ... | | | 5,24,01,266 3 3 |
| பாங்கிகளுக்கு கொடுபட வேண்டியது (சர்க்கார் கடன் பத்திரத்தின் செக்யூரிடியின் பேரில்) ... ... | | | 25,00,000 0 0 |
| வாங்கிக்கொள்ளாத டிவிடெண்டுகள் ... ... | | | 5,694 8 0 |
| வசூலாகவேண்டிய பில்லுகள் ... ... | | | 26,50,211 0 2 |
| வியாபார கிரெடிட்டுகள் ... ... | | | 12,50,047 12 0 |
| பிராஞ்சு கணக்குகளில் பற்று வரவு நிலுவை ... ... | | | 17,26,806 10 8 |
| டிராப்டுகள் T. T. கள் கொடுபடவேண்டியது ... ... | | | 2,99,196 2 8 |
| சில்லரை இனங்கள் ... ... | | | 73,616 8 3 |
| **லாப நஷ்டக் கணக்கு :—** | | | |
| 31-12-45 கணக்குப்படி பாக்கித் தொகை ... | | 2,84,213 7 1 | |
| பொது ரிசர்வ் நிதிக்கு ஒதுக்கியது ... | 50,000 0 0 | | |
| வரிகளுக்காக ஒதுக்கியது ... | 1,50,000 0 0 | | |
| சிப்பந்திகளுக்கு 1½ மாத போனசுக்காக ஒதுக்கியது | 20,000 0 0 | | |
| 31-12-45-ந் தேதியுடன் முடிவடையும் வருஷத்திய முடிவான டிவிடெண்ட் A, B பங்குகளுக்கு 7%, C பங்குகளுக்கு 6% வீதம் ... | 60,625 0 0 | 2,80,625 0 0 | |
| ஒதுக்கியபின் பாக்கித் தொகை ... ... | | 3,588 7 1 | |
| **இவ்வருஷத்திய நிகர லாபம்** ... ... | | 8,14,606 11 3 | |
| | | 8,18,195 2 4 | |
| இதில் இடைக்கால டிவிடெண்டு C பங்குகளுக்கு 6% வீதமும் A & B பங்குகளுக்கு 9% வீதமும் 30-6-46உ முடிவடையும் அரை வருஷத்திற்கு கொடுத்தது | 69,375 0 0 | | |
| பொது ரிசர்வ் நிதிக்கு ஒதுக்கியது | 2,25,000 0 0 | | |
| வரிகளுக்கு ஒதுக்கியது | 72,094 1 0 | | |
| சிப்பந்திகளுக்கு ஒரு மாத போனஸ் | 20,000 0 0 | 3,86,469 1 0 | 4,31,726 1 4 |
| மொத்தம் ... | | | 6,40,81,273 11 3 |

K. லக்ஷ்மணன்,
அக்கவுண்டண்ட்.

டைரக்டர்கள்
R. விஸ்வநாதன்
K. வெள்ளசாமி
R. S. A. சங்கர ஐயர்
V. வெங்கட்ராமன்

# பாங்கி, லிமிடெட்.

## யன்றுள்ள கணக்கு விவரம்.

### ஆஸ்திகள்.

| | | ரூ. அ. பை. | ரூ. அ. பை. |
|---|---|---|---|
| கடன்கள் உண்டியல்கள் பேரில் கொடுக்கல், வாங்கல், பிராமிசரி நோட்டுகள், மற்றும் இதர அட்வான்ஸ்கள் ... | | | 3,23,61,983 6 8 |
| 1913ஆம் வருஷத்து இந்திய கம்பெனி சட்டத்தின் 7-வது பிரிவின் பிரகாரம் உள்ள இனங்கள் :— | | | |
| 1. பாங்கிக்கு பூரண செக்யூரிடி உள்ளவை என்று சொல்லக்கூடிய கடன்கள் ... | | 2,10,75,377 9 6 | |
| 2. பாங்கியின் வசமுள்ள கடன்களில் பூரண நம்பிக்கையுள்ளவை என்று சொல்லக்கூடியவை: | | | |
| (A) ஜாயிண்ட் புரோநோட்டுகளும் இதர புரோநோட்டுகளும் ... | | 43,55,589 1 3 | |
| (B) தனித்தனியாக பலர் பேரில் உள்ள புரோநோட்டுகள் ... | | 12,00,564 4 0 | |
| (C) உண்டியல்களும் டிராப்ட்களும் ... | | 57,06,720 13 10 | |
| (D) புரோநோட்டு இல்லாமல் தற்காலிகமாக அனுமதிக்கப்பட்ட அதிகப் பற்று ... | | 9,564 9 9 | |
| 3. சந்தேகாஸ்பதமான or வசூலாகாத கடன் விவரம் ... | | 14,167 0 4 | |
| 4. டைரக்டர்கள் இதர ஆபீஸர்கள் பேரில் உள்ள கடன் விவரம் ... | | இல்லை | |
| (இந்த வருஷ காலத்தில் டைரக்டர்களுக்கு கடனுகளோ அட்வான்ஸுகளோ யாதொன்றும் கொடுக்கப்படவில்லை) | | | |
| பாங்கி கட்டிடம் பெறுமானம் ... | | 2,22,704 6 0 | |
| 31-12-46 வரை தள்ளப்பட்ட தேய்மானம் ... | | 24,193 12 0 | 1,98,510 10 0 |
| கஜானா பெட்டி, தராசு, மேஜை (தளவாடங்கள் முதலியன) பெறுமானம் ... | | 1,11,909 4 7 | |
| இந்த வருஷத்தில் அதிகப்படியாக வாங்கியது ... | | 40,807 8 6 | |
| | | 1,52,716 13 1 | |
| தள்ளுபடி ஆனது ... | | 210 10 4 | |
| | | 1,52,506 2 9 | |
| 31-12-46 வரை தள்ளப்பட்ட தேய்மானம் ... | | 47,080 5 1 | 1,05,425 13 8 |
| கணக்கு புத்தகங்கள், ஸ்டேஷனரி சாமான்கள் முதலிய ஸ்டாக்குகள் வகையரா ... | | | 53,684 15 1 |
| வசூலிக்கவேண்டிய பில்லுகள் ... | | | 26,50,211 0 2 |
| வாடிக்கைக்காரர்களது பொறுப்பு ... | | | 12,50,047 12 0 |
| சில்லரை இனங்கள் ... | | | 4,78,810 6 6 |
| முதலீடுகள் :— | | | |
| * சர்க்கார் கடன் பத்திரங்கள் பெறுமானம் ரூ. 1,53,42,000 (மார்க்கெட் விலை ரூ. 1,55,94,714-5-0) வாங்கிய விலைப்படி ... | | 1,55,05,199 7 0 | |
| (ரூ. 80,000 பெறுமான பத்திரங்கள் இடமாறுகையில் தவறிவிட்டது. டூப்ளிகேட்டுக்கு மனுச்செய்து கொள்ளப்பட்டிருக்கிறது) | | | |
| ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனி பங்குகள் பெறுமானம் ரூ.1,43,080 (மார்க்கட் மதிப்பு ரூ.1,65,602-8-0) வாங்கிய விலைப்படி ... | | 1,54,343 12 0 | |
| ஷெட்யூல் பாங்கு வசம் டிபாசிட் செய்யப்பட்ட சிப்பந்திகளின் செக்யூரிடிகள் ... | | 15,225 0 0 | 1,58,74,768 3 0 |
| முதலீடுகளில் சேர்ந்துள்ள வட்டி இனம் ... | | | 1,96,705 7 11 |
| கைவசம் ரொக்கம் ... | | 59,49,363 11 10 | |
| பாங்கிகளில் கரண்ட் கணக்குகளிலுள்ள ரொக்கம் | 36,61,762 4 5 | | |
| பாங்கிகளின் குறுகிய கால டிபாசிட்டுகள் | 15,00,000 0 0 | 51,61,762 4 5 | 1,11,11,126 0 3 |
| மொத்தம் ... | | | 6,40,81,273 11 3 |

4

T. R. வெங்கடராம சாஸ்திரி,
சேர்மன்.

S. N. N. சங்கரலிங்க அய்யர்,
மானேஜிங் டைரக்டர்.

P. S. சுப்ரமணிய அய்யர் & கம்பெனி,
ரெஜிஸ்டர்ட் அக்கவுண்டன்டுகள் & ஆடிட்டர்கள்.

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 6
இதழ் 29

1947 பிப்ரவரி 16

வியய
மாசி 4





உலகத்தில் வேறு எந்த நாட்டிலும் இல்லாத அற்புதமான சிற்பக் கலை விளங்கும் திருக் கோயில்கள் நமது செந்தமிழ் நாட்டில் உண்டு. கீழ் நாட்டு, மேனாட்டு அறிஞர்கள் எத்தனையோ பேர் நமது தமிழ் நாட்டுத் திருக் கோயில்களின் சிறப்பைப் புகழ்ந்து பாராட்டியிருக்கிறார்கள். எவ்வளவு பாராட்டினாலும் உள்ளம் திருப்தியடையாமல், "மேலும் புகழுவதற்கு வார்த்தைகள் இல்லையே!" என்று வருந்தியிருக்கிறார்கள். அத்தகைய அதிசயமான திருக் கோயில்கள் தமிழ் நாட்டில் மொத்தம் 32,000 இருக்கின்றன வென்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

தமிழகத்திலுள்ள முப்பத்திரண்டாயிரம் கோயில்களுக்குள்ளேயும் மிகவும் புகழ்பெற்ற கோயில்கள் சிதம்பரத்திலுள்ள ஸ்ரீ நடராஜர் கோயிலும், ஸ்ரீரங்கத்திலுள்ள ஸ்ரீ ரங்கநாதர் ஆலயமும் ஆகும். இந்த இரண்டு ஆலயங்களும் பொன்னம்பலம் என்றும் பொன்னரங்கம் என்றும் பழைய காலத்திலிருந்து இன்றுவரை பெயர் பெற்று விளங்குகின்றன. இந்த இரண்டு ஆலயங்களிலும் கர்ப்பக் கிருஹத்துக்கு மேலேயுள்ள மண்டபத்துக்கு அவ்வப்போது பழந் தமிழ்நாட்டு மன்னர்கள் பொற்கூரை வேய்ந்து புகழும் புண்ணியமும் சம்பாதித்துக் கொண்டார்கள். நாயன்மார்கள் முதலிய சிவனடியார்களின் பாடல்களிலே தில்லைப் பதியும், ஆழ்வார்கள் முதலான விஷ்ணு பக்தர்களின் பாடல்களிலே ஸ்ரீரங்கமும் பெரும்பாலான பாடல்களை உரிமை கொண்டிருக்கின்றன.

"நாவுண்டு நீயுண்டு நாமம் தந்தோதப்
பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ?—பூவுண்டு
வண்டுறங்கும் சோலை மதிளரங்கத் தேவனை
உண்டுறங்கு வானொருவன் உண்டு"

என்று ஸ்ரீரங்கத்தைப் பற்றி ஒரு பக்தர் பாடிய பாடல் எவ்வளவு அற்புதமாயிருக்கிறது? படிக்கப் படிக்க, பாடப் பாட எப்படி நம் உள்ளத்தைக் கவர்ந்து மயக்கம் உண்டாக்குகிறது!

அத்தகைய ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திலுள்ள ஸ்ரீரங்கநாதர் ஆலயம் சென்ற பிப்ரவரி 1உ ஹரிஜனங்கள் உட்பட சகல ஹிந்துக்களுக்கும் திறந்து விடப்பட்டது என்னும் செய்தி குமரி முனையிலிருந்து இமயமலை வரையில் உள்ள முப்பது கோடி ஹிந்துக்களுக்கும் பூரிப்பை அளித்தது. இந்தியாவின் வடகிழக்கு எல்லையில், கையிலே கோல் பிடித்துக் கிராமம் கிராமமாக நடந்து சென்று கொண்டிருக்கும் காந்தி மகாத்மாவுக்கும் மேற்படி செய்தி எல்லையற்ற உவகையை அளித்திருக்கும்.

ஸ்ரீரங்கநாதர் பள்ளிகொண்டிருக்கும் கர்ப்பக் கிருஹத்துக்கு மேலே அமைந்துள்ள அற்புத அழகு வாய்ந்த பொன் மண்டபமும், அதன் ஒரு பக்கத்தில் விளங்கும் சிறந்த சிலை விக்கிரகமும் இந்தக் "கல்கி" இதழின் அட்டையை அழகு செய்து அலங்கரிக்கின்றன.

—புகைப் படம் எடுத்தவர்: ஸ்ரீ டி. ஏ. துரை, ஸ்ரீரங்கம்.



I




மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 29

# என்ன சேதி?

## நல்ல குட்டு!

சென்னை சர்க்காருக்குப் பலமான ஒரு குட்டு கிடைத்திருக்கிறது.

"தப்பு, தப்பு, சுத்தத் தப்பு!" என்று ஒன்றுக்கு மூன்று தடவை அழுத்தந் திருத்தமாக, நம்முடைய கைத்தொழில் சப்ளை மந்திரி ராஜாஜி சென்னை சர்க்காரின் ஆலைக் கொள்கையைப் பற்றி மத்திய சட்டசபையிலே சொல்லியிருக்கிறார். சென்னை சர்க்காருக்கு ஏற்கெனவே அளிக்கப்பட்டிருக்கும் கதிர்க் கோட்டா எந்தக் காரணத்தை முன்னிட்டும் திரும்பப் பெற்றுக் கொள்ளப்படாதென்றும் அவர் தெளிவாக விளக்கியிருக்கிறார்.

கட்டத் துணி யில்லாமல் தவித்துக் கொண்டிருக்கும் சென்னை மாகாண வாசிகளுக்கு இச் செய்தி மிகவும் குதூகலமளிக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

சென்னை மாகாண சர்க்காரின் ஆலைக் கொள்கையைப் பற்றிய சந்தேகத்தைத் தீர்த்து, இம்மாகாண வாசிகளின் மானத்தைக் காப்பாற்றியதற்காக நம்முடைய இடைக்கால சர்க்காரை வாழ்த்துகிறோம்.

## ஒரு சமாதானம்

ஆனால், அபாயம் இன்னும் நீங்கவில்லை. காரியக் கமிட்டியின் அபிப்பிராயத்தையே மீறிப் பிரதம மந்திரியாக வந்த பிரகாசம், மத்திய சர்க்காரின் உத்தரவையும் மீற மாட்டார் என்பது என்ன நிச்சயம்? மலையை விழுங்கிய மகாதேவனுக்குக் கதவு ஒரு அப்பளம் அல்லவா?

மத்திய சர்க்காரின் தீர்ப்பை ஸ்ரீ பிரகாசம் ஒப்புக் கொண்டாலும் நம்முடைய சட்ட மந்திரி ஸ்ரீ பாஷ்யம் அதை ஒப்புக் கொள்ள வேண்டுமே! மத்திய சர்க்கார் பலவந்தமாகக் கதிர்க் கோட்டாவை சென்னைக்குக் கொடுத்தால், அந்தக் கதிர்கள் மூலம் உற்பத்தியாகும் நூலை இந்தோனேஷியாவுக்கு அனுப்பி வைக்கப் போவதாக அவர் ஏற்கெனவே சொல்லியிருக்கிறார் அல்லவா?

ஸ்ரீ பாஷ்யம் அர்த்தமாதிரியாகச் சொல்லியிருந்த போதிலும் நமக்கு ஒரு சமாதானம் இருக்கிறது.

சென்னை மாகாண வாசிகள் கட்டத் துணி யில்லாமல் தவிக்கிறார்கள் என்னும் விஷயம் இந்தோனேஷிய மக்களுக்குத் தெரிந்தால், அவர்கள் இந்தியாவிலிருந்து வரும் துணியைத் திரும்பியாவது பார்ப்பார்களா? அதைச் சென்னை சர்க்காருக்கே திருப்பி யனுப்பி அதன் முகத்தில் கரியைப் பூசி விடுவார்கள் என்பது நிச்சயம்.

## எந்த நிலைமைக்கு வருமோ?

இந்த வருஷம் பிரிட்டனில் கடுமையான நிலக்கரிப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறதாம். நிலக்கரி இல்லாததால் பெரிய பெரிய தொழிற்சாலைகளுக்கெல்லாம் மின்சார சப்ளை தற்காலிகமாக நிறுத்தப்பட்டிருக்கிறதாம். கடைகள், வீடுகள், சிற்றுண்டிச் சாலைகள் முதலியவற்றிலெல்லாம் மெழுகு வர்த்திகளும் மண்ணெண்ணெய் விளக்குகளுமே எரிகின்றனவாம்.

நிலக்கரிப் பஞ்சத்தைப் பற்றி வந்திருக்கும் மேற்படி செய்திகளிலே இந்தியா மந்திரி காரியாலயத்தைப் பற்றியும் ஒரு செய்தி வந்திருக்கிறது.

இந்தியா மந்திரி காரியாலயம் ஒரே இருட்டாயிருக்கிறதாம். பெதிக் லாரென்ஸ் ஜன்னலுக்குப் பக்கத்திலே உட்கார்ந்து, அந்தி ஒளியின் மூலம் இந்திய தஸ்தவேஜுகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறாராம்.

பேஷ்! பட்டப் பகலிலே, பல மின்சார விளக்குகளுக்கு மத்தியிலே பிரிட்டிஷ் மந்திரிகள் இந்தியப் பிரச்னையைக் கவனித்தபோதே, அது இந்த லட்சணத்துக்கு வந்து சேர்ந்திருக்கிறது. இனிப் புண்ணிய

வான்கள் அந்தி வெளிச்சத்திலும் சன்னிரவிலும் பார்க்கும்போது அது எந்த நிலைமைக்கு வந்து சேரப் போகிறதோ?

## சுபசூசகம்

கடவுளின் பிரதிநிதிகளென்றும் தெய்வத் தன்மை பொருந்தியவர்களென்றும் சொல்லிக் கொண்டு வந்த இந்திய சமஸ்தானாதிபதிகள், மேற்படி பிரதிநிதித்வத்தையும் தெய்வத் தன்மையையும் பொட்டலங் கட்டி வைத்துவிட்டு, அரசியல் நிர்ணய சபையில் சேருவதற்கான பேச்சு வார்த்தைகளை ஆரம்பித்திருப்பது மகிழ்ச்சிக் குரிய விஷயமாகும்.

சென்ற வாரம் புது டில்லியில் மேற்படி மன்னர்கள் கமிட்டியும் அரசியல் நிர்ணய சபைக் கமிட்டியும் கூடி பல விஷயங்களைப் பற்றி விவாதித்திருக்கின்றன. 'அதில் மன்னர்கள் பல முக்கிய விஷயங்களில் விட்டுக் கொடுக்க இணங்கி யிருக்கிறார்கள்.

இதுவரை சமஸ்தான விஷயங்களில் யாருமே தலையிடக் கூடாதென்று மன்னர்கள் மிரட்டி வந்தார்கள். அரசியல் நிர்ணய சபையில் சமஸ்தானங்களுக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் 93 ஸ்தானங்களுக்கு, சமஸ்தானங்கள் தங்கள் இஷ்டம் போல் யாரை வேண்டுமானாலும் பிரதிநிதிகளாக அனுப்ப உரிமை இருக்கிறதென்றும் வாத விவாதங்கள் செய்து வந்தார்கள்.

இப்போது, அம்மாதிரி சொல்லவில்லை. முக்கிய விவகாரங்களிலெல்லாம் அரசியல் நிர்ணய சபைக் கமிட்டியுடன் கலந்து கொண்டு செய்வதாக அவர்கள் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். மன்னர்களுக்கு இத்தகைய நல்ல புத்தி ஏற்பட்டது, தேசத்தின் நல்வாழ்வுக்கு ஒரு சுப சூசகம் என்று தான் சொல்லவேண்டும்.

## நல்ல உதாரணம்

மன்னர்களைப் பற்றியும் அரசியல் நிர்ணய சபையைப் பற்றியும் குறிப்பிடும் போது, பரோடா சமஸ்தானம் செய்திருக்கும் பாராட்டத் தக்க ஒரு காரியத்தையும் குறிப்பிட வேண்டியது அவசியமாகும்.

அரசியல் நிர்ணய சபையிலே பரோடா சமஸ்தானத்துக்கு மூன்று ஸ்தானங்கள் கிடைத்திருக்கின்றன. அந்த மூன்று ஸ்தானங்களுக்கும் பரோடா சட்ட சபை தனக்குப் பிடித்தமான பிரதிநிதிகளைத் தேர்தெடுத்து அனுப்ப மேற்படி சமஸ்தானம் ஒப்புக் கொண்டிருக்கிறது. மற்ற சமஸ்தானங்களும் பரோடாவின் உதாரணத்தைப் பின்பற்றும் என்று எதிர்பார்க்கிறோம்.

---

ஆலப்பிழை எம். எல். ஜனார்த்தன பிள்ளை, M.L.A. அவர்களின்



குமாரர் சிரஞ்சீவி
ஜே. கிருஷ்ணமூர்த்தி
B.A., க்கும்
எலக்ட்ரிகல் எஞ்ஜினியரிங் கண்டிராக்டர்
பெங்களூர்
ஸ்ரீ ஏ. ஜி. சேனாபதி முதலியார்
அவர்களின் புதல்வி
சௌ. லீலாவதிக்கும்
திருமணம் சிறப்பாக நடந்தேறியது.

அவ்வமயம், மைசூர் திவான் ஸர். ஏ. ராமசாமி முதலியார், மைசூர் மஹாராஜாவின் அந்தரங்க காரியதரிசி ஸர். டி. தம்பு செட்டி, திருவாங்கூர் திவான் ஸர். சி. பி. ராமசாமி ஐயர், நிஜாம் எக்ஸிக்யூடிவ் கௌன்ஸிலின் தலைவர் ஸர். மிர்ஜா இஸ்மேயில், குவாலியர் எக்ஸிக்யூடிவ் கௌன்ஸிலின் உப தலைவர் ஸ்ரீ. எம். ஏ. ஸ்ரீனிவாசன், சீனாவில் இந்திய ஸ்தானிகரான கே. பி. எஸ். மேனன், லண்டனில் திருவாங்கூர் வர்த்தகக் கமிஷனராயுள்ள டி. வி. ஏ. ஈஸ்வரன், மான்செஸ்டர் ஜெனர். ஜே. மின், நியூயார்க் டி. பிரேன்னி, நிஜாம் சமஸ்தானம் நவாப் ஜாக்கீ யார் ஜங் ஆகிய பிரமுகர்களிடமிருந்தும், மற்றும் பல நண்பர்கள், உறவினர்களிடமிருந்தும் பாராட்டுச் செய்திகளும் வாழ்த்துச் செய்திகளும் வந்து குவிந்தன.

# யோசனை கேட்கலாம்!




இந்த வருஷம் பிரிட்டனில் கடுமையான நிலக்கரிப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது. கைவசமிருக்கும் நிலக்கரியை எப்படி விநியோகம் செய்வதென்று தெரியாமல் பிரிட்டிஷ் சர்க்கார் திண்டாடுகிறது. அவர்கள் நம்முடைய பிரதம மந்திரி பிரகாசத்திடம் வந்து யோசனை கேட்கலாம்!

# சாது மிரண்டால்...!

“இது தருமமா? இது தருமமமா? இது நியாயந்தானா?

“மோசம் போனோம். ‘பொறுத்தவர் பூமி யாள்வார்’ என்ற ஆன்றோர் வாக்கியத்தை நம்பி மோசம் போனோம்.

“பொறுமையாக இருப்போருக்கு இது காலமல்ல. இவ்வளவு காலமாகப் பொறுமையைக் கட்டி அழுது கொண்டிருந்ததின் விபரீத பலனை இன்று நாங்கள் அனுபவிக்கிறோம்.

“அன்றும் இன்றும் என்றும் அரைப் பட்டினியால் அவஸ்தைப் பட்டு வருவதுதான் நாங்கள் கண்ட பலன். இன்னும் பாருங்கள்:

“பொறுமை இழந்து பொங்கி எழுந்தோரெல்லாம் பூரண பலனை அனுபவித்து வருகிறார்கள். பொறுமையும் பொறுப்பு உணர்ச்சியும் எங்களைப் பாதாளத்தில் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டன.

“போதாக் குறைக்கு ஆசை வார்த்தைகளும் சொல்லி எங்களை ஏமாற்றி விட்டார்கள்.

“மகத்தான கௌரவம் பொருந்திய தொரு தொழிலைச் சேர்ந்த எங்களுக்குக் கௌரவ ஏணியின் அடிப்படியில் கூட இடம் கிடைக்காமல் செய்து விட்டார்கள்.

“ஜனப் பிரதிநிதிகள் அரசாங்கத்தை நடத்த ஆரம்பித்து விட்டார்கள். எங்கள் கலி தீர்ந்துவிடும் என்று நம்பிக் கொண்டிருந்தோம். ஆனால், அரசாங்கம் எங்கள் தலையில் ஒரு பெரிய கல்லைத் தூக்கிப் போட்டு விட்டது.

“இருந்தாலும் எங்களை நசுக்கிவிட முடியாது. எங்கள் கௌரவத்திற்குப் பங்கம் ஏற்படுவதை இனி நாங்கள் பார்த்துக் கொண்டிருக்க மாட்டோம்.

“நாங்கள் இது வரையில் சாதுக்களாக இருந்தோம். ஆனால், சாது மிரண்டால் என்ன ஆகும் என்பதை இப்போது சர்க்காருக்குப் பிரத்தியட்சமாகக் காட்டப் போகிறோம்.”

இவ்வாறாக, பள்ளிக்கூட ஆசிரியர்கள் சென்னை சர்க்கார் கல்வி மந்திரிக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பியிருக்கிறார்கள்.

இதைத் தவிர, பல இடங்களிலும் ஆசிரியர்கள் கூட்டங்கள் கூடிச் சென்னை சர்க்காரின் விசித்திரமான சம்பளத் திட்டத்தைக் கண்டித்துத் தீர்மானங்களும் நிறைவேற்றியிருக்கிறார்கள்.

அரைப் பட்டினி கிடந்து நடைப் பிணங்களாக இருந்து வருவதைக் காட்டிலும், முழுப் பட்டினி கிடந்து மோட்சம் அடைவதே சாலச் சிறந்தது என்றும் சில ஆசிரியர்கள் முடிவு செய்து உண்ணாவிரதமும் ஆரம்பித்திருக்கிறார்கள்.

* * *

இருநூறு ஆண்டுகளுக்கு மேலாகக் கொடுங்கோலாட்சியைச் சகித்து வந்த இந்தியாவுக்குக்கூட கதி மோட்சம் ஏற்படும் காலம் வந்திருக்கிறது.

எனினும் ஆரம்பப் பள்ளிக்கூட ஆசிரியர்கள் மாத்திரம் அன்றிருந்த மேனிக்கு அழிவின்றி ஆறுத் துயரத்துக்கு ஆளாகியே வருகிறார்கள்.

அவர்களைப் பொறுமைக் கடல் என்றுதான் சொல்ல வேண்டும். அவர்களுடைய பொறுமைக்குக் கங்கு கரை கிடையாது.

ஆம், விஞ்ஞானிகள் ஆகாய சஞ்சாரம் செய்து வரும் இக்காலத்தில் கூட, ஆசிரியர்கள் மாதம் முப்பது ரூபாய் சம்பளத்தைக் கொண்டு வாழ்க்கை நடத்துகின்றார்களெனில், அவர்களுடைய பொறுமையைப் பார்த்துப் பூமா தேவியும் பொறாச்சரியம் அடைவாளென்பதில் சந்தேகம் இருக்க முடியுமா?

ஆனால், எத்தனையோ வருஷங்களாகப் பொறுமையுடன் இருந்து வந்திருக்கும் அவர்களைக் கூட, சென்னை சர்க்காரின் செய்கை, மேற்கூறியவாறு திடுக்கிட்டுத் துள்ளிக் குதிக்கும்படி செய்திருக்கிறது.

சிற்சில விஷயங்களில் சென்னை சர்க்காரின் போக்கு விசித்திரமாக இருக்கிறதல்லவா? அதுபோலவே,

இவ் விஷயத்திலும் அவர்கள் தங்களுடைய விசித்திர வேலையைக் காட்டி விட்டார்கள்.

அதாவது, குறைந்த சம்பளம் பெற்று வரும் சர்க்கார் சிப்பந்திகள், உபாத்தியாயர்கள் முதலியோரின் சம்பள விகிதங்களைத் தற்கால நிலைமையை அனுசரித்து மாற்றும் விஷயமாக ஆலோசித்துச் சென்னை மந்திரிகள் கமிட்டி சமீபத்தில் தன் சிபார்சுகளை வெளியிட்டது நேயர்கள் அறிந்ததே.

மேற்படி கமிட்டி செய்துள்ள சிபார்சுகளில் எத்தனையோ குறைகள் இருக்கின்றன.

உதாரணமாக, சிப்பந்திகளில் ஒரு பிரிவினருக்கு 135% சம்பளம் உயர்த்தப்பட்டிருக்கையில், மற்றொரு பிரிவினருக்கு 7½%தான் உயர்த்தப்பட்டிருக்கிறது. அநீதியும் ஆட்சேபகரமுமான இந்த வித்தியாசம் ஏன்?

மற்றும் பள்ளிக்கூட ஆசிரியர்கள் சம்பந்தப்பட்ட வரையில் அக்கமிட்டி செய்துள்ள சிபார்சுகள், புண்ணில் கோலிட்டதற் கொப்ப, ஆசிரியர்களுக்கு மிகுந்த மனக் கொதிப்பை உண்டு பண்ணியிருக்கின்றன.

* * *

தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிக்கூட ஆசிரியர்களின் சம்பள விஷயம் மிகவும் கஷ்டமான ஒரு பிரச்னை என்று சர்க்கார் அறிக்கை கூறுகிறது. அது கஷ்டமான பிரச்னை என்று கூறுவதுடன் சர்க்காரின் கடமை முடிந்து விடாதென்பதை நாமும் கூற விரும்புகிறோம்.

பள்ளிக்கூடங்களை நடத்தும் தனி நபர்கள் மிக மிக ஏழைகளாக இருக்கிறார்களாம். எனவே, அவர்களால் ஆசிரியர்களுக்குப் போதிய சம்பளம் கொடுக்க முடியாதாம்.

பிரகாசம் சர்க்காரின் இந்தக் கூற்று வெகு வேடிக்கையாக இருக்கிறது.

பரம ஏழைகளாக இருப்போர் பள்ளிக்கூடங்களை நடத்த சர்க்கார் ஏன் அனுமதிக்க வேண்டும்? அவர்களும் பரம ஏழைகளாக இருந்துகொண்டு, ஆசிரியர்களையும் படுமோசமான ஏழைகளாக வைத்துக் கொண்டிருப்பதால் யாருக்கு என்ன லாபம்?

ஒன்று, சர்க்கார் அத்தகைய பள்ளிக்கூடங்களுக்கு அதிக உதவித் தொகையளித்து நிலைமையைச் சீர்படுத்த உடனே முயற்சிக்க வேண்டும்.

இன்றேல், அப்பள்ளிக்கூடங்களைச் சர்க்காரே தங்களுடைய நிர்வாகத்தில் எடுத்துக் கொண்டுவிட வேண்டும்.

* * *

ஆசிரியர்கள் விஷயத்தில் சென்னை சர்க்கார் அலட்சியமாக இருந்திருந்தால்கூட, அவர்களுக்கு இவ்வளவு ஆத்திரம் ஏற்பட்டிராது. ஆனால், மேற்படி கமிட்டியின் சிபார்சுகள் மேற்கொண்டு அவர்களை அவமதித்து அவர்களுக்கு அநீதியும் இழைப்பதாய் இருக்கின்றன.

அதாவது எஸ். எஸ். எல். ஸி. படிப்புள்ள சாதாரண குமாஸ்தாவின் சம்பளம் 45 ரூபாய் என்று சர்க்கார் நிர்ணயித்திருக்கிறார்கள். தற்கால விலைவாசிகளைக் கவனிக்கும்போது இது மிகக் குறைந்த சம்பளம் என்பதில் சந்தேகம் இருக்க இடமில்லை.

ஆனால், அதே படிப்பைப் பூர்த்தி செய்துவிட்டு, மேற்கொண்டு இரண்டு வருஷ காலம் போதனைமுறைப் பயிற்சியும் பெற்றுள்ள ஆசிரியர்களுக்கு அதைக் காட்டிலும் குறைந்த சம்பளம் நிர்ணயித்திருக்கிறார்கள்.

அதாவது, சர்க்காரின் புதிய திட்டப்படி ஆரம்பப் பள்ளிக்கூட ஆசிரியருக்கு மிகவும் தாராளமாக மாதம் 35 ரூபாய் அதிகப்பட்ச சம்பளம் என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது!

எந்த தர்ம சாஸ்திரத்தை அல்லது பொருளாதார சாஸ்திரத்தை ஆதாரமாகக் கொண்டு சர்க்கார் இவ்வாறு நிர்ணயித்தனரோ, கடவுளுக்குத்தான் தெரியும்!

எத்தனையோ ஆண்டுகளாக ஆசிரியர்கள் பட்டு வரும் அவஸ்தை தெரிந்திருந்தும்கூட, இவர்கள் ஏன் மேற்கொண்டு அனுவசியமாகப் பயிற்சி பெற்று ஆசிரியர் திருக்கூட்டத்தில் சேர்ந்தார்கள் என்ற ஆத்திரத்தினால் சென்னை சர்க்கார் அவ்வாறு ஆசிரியர்களின் தலையில் கை வைத்தார்களா?

அல்லது மற்றச் சகலரும் நேர் நடவடிக்கையில் இறங்கி சர்க்காரைச் சஞ்சலத்திற் குள்ளாக்கிச் சந்தியில் இழுத்து விடுகிறார்கள். ஆனால், ஊருக்கு இளைத்தவர்களும், பொறுமையைத் தவிர வேறெந்த பூஷணத்தையும் அறியாதவர்களுமான பள்ளிக்கூட ஆசிரியர்கள் அவ்வாறு எதுவும் செய்துவிட மாட்டார்கள் என்ற துணிச்சலுடன சர்க்கார் கூச்சமின்றி வெட்கக் கேடான மேற்படி சம்பள விகிதத்தை நிர்ணயித்தார்களா?

புதிய திட்டத்தின் மூலம் ஆசிரியர்களுக்கு மற்றொரு விதத்திலும் அநீதி இழைக்கப்பட்டிருக்கிறது.

அதாவது படிப்பிலும் பயிற்சியிலும் ஒரேவித யோக்கியதாம்சங்களுள்ள ஆசிரியர்களிடையே பாரபட்சம் காட்டப்பட்டிருப்பதுதான்.

லோயர் அல்லது ஹையர் அல்லது செகண்டரி கிரேடைச் சேர்ந்த உபாத்தியாயர்களுக்கு சர்க்கார் பள்ளிக் கூடங்களில் ஒருவிதமாகவும், ஸ்தல ஸ்தாபனப் பள்ளிக் கூடங்களில் அதைவிடக் குறைவாகவும், தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிக் கூடங்களில் எல்லாவற்றையும்விடக் கேவலமாகவும் சம்பளம் நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது.

ஹிந்து மதத்திற்கே களங்கமாக இருந்து வந்த தீண்டாமை இன்று தவிடு பொடியாகி வருகையில், ஆசிரியர்களிடையே சர்க்கார் ஒரு புது விதமாக தீண்டாமையைப் புகுத்தியிருப்பது கேலிக் கூத்தாகும்.

அதாவது, எய்டெட் பள்ளிக்கூட ஆசிரியர்களைத் தீண்டாதவர்கள் போன்று சர்க்கார் ஒதுக்கித் தள்ளி விட்டனர்!

* * *

ஆதிரை கிழே தள்ளியதுமின்றிக் குழியும் பறித்ததாம். ஏற்கெனவே ஆசிரியர்களுக்குச் சம்பளம் மிகக் குறைவு. இந்த லட்சணத்தில் அவர்கள் விபரீதமான பாரபட்ச முறைக்கும் ஆளாவதெனில், அதை யார்தான் சகித்துக் கொண்டிருக்க முடியும்?

அதனால்தான் பொறுமையே உருவெடுத்தவர்களான ஆரம்பப் பள்ளிக் கூட ஆசிரியர்கள்கூட இப்போது ஆர்ப்பரித்து எழுந்திருக்கிறார்கள்.

அன்னியர்களும் அன்னியர்களின் தாஸர்களும் அரசாங்க நிர்வாகத்தை நடத்தி வந்த காலத்தில் ஆசிரியர்கள் பட்ட அவதியும் அவமதிப்பும் போதாதா?

நாடெங்கும் கட்டாயக் கல்வி முறையை அமுலுக்குக் கொண்டு வந்து, அறியாமையாகிற அந்தகாரத்தை அடியோடு அகற்ற முற்பட வேண்டிய ஜனப் பிரதிநிதி சர்க்கார், சவிரக்கமின்றி ஆசிரியர்களுடைய வயிற்றில் அடித்திருப்பதன் மூலம் கல்வியின் அஸ்திவாரத்துக்கே அடிகொடுத்திருக்கிறார்கள் என்று கூறுவது மிகையாகாது.

ஆகையால், இந்த அநீதிக்கு உடனே பரிகாரம் தேடவேண்டியது சென்னை சர்க்காரின் அவசரமான கடமையாகும்.

தற்போதுள்ள சென்னை அரசாங்கம் உண்மையான ஜனநாயக அரசாங்கமாக இருக்குமாயின், அது கீழ்க்கண்ட முறைகளையாவது உடனே கைக்கொள்ள வேண்டும்:

1. அரைப் பட்டினி கிடந்து வரும் ஆரம்பப் பள்ளிக்கூட ஆசிரியர்களுக்கு ஒரு வேளையாவது முழு ஆகாரம் கிடைக்கக் கூடியவாறு சம்பளத்தை உயர்த்த வேண்டும்.

2. ஒரேவித யோக்கியதையுள்ள ஆசிரியர்களிடை புகுத்தப் பட்டிருக்கும் தீண்டாமைக் கொடுமையைத் தொலைத்தொழிக்க வேண்டும்.

3. மற்ற சர்க்கார் சிப்பந்திகளுக்குக் கொடுக்கப் பட்டிருப்பது போன்று ஆசிரியர்களுக்கும் இடைக்கால உதவி அளிக்க வேண்டும்.

மிகவும் அவசரமான, முற்றிலும் நியாயமான இந்தக் கோரிக்கைகளை நிறைவேற்றுவதில் சர்க்காருக்குத் தயக்கமோ அல்லது தடுமாற்றமோ இருக்கக் காரணம் எதுவுமில்லை.

இதற்கு முன் அதிகாரத்திலிருந்த ஏகாதிபத்திய வாதிகள், ராணுவத்துக்கும் இதர அதர்ம காரியங்களுக்கும் எல்லையின்றிக் கனகாபிஷேகம் செய்வார்கள். ஆனால், அவர்களுக்கு இந்தியர்களின் கல்வி அல்லது ஆரோக்கிய அபிவிருத்தி விஷயத்தில் மாத்திரம் 'பணக் கஷ்டம்' வந்து குறுக்கிட்டுவிடும்.

பணக் கஷ்டம் என்பதற்காக எதிர் காலத் திட்டங்களைத் தள்ளி வைக்கலாம்; புனருத்தாரண வேலைகளையும் தள்ளி வைக்கலாம். ஆனால், பட்டினிப் பிரச்னையைத் தள்ளி வைக்க முடியாது.

சர்க்காரின் பணக் கஷ்டம் தீரும் வரையில் ஆசிரியர்கள் பட்டினி கிடந்து பரிதவிக்க முடியாது. ஆகையால், 'பணக் கஷ்டம்' என்று கூறிச் சென்னை சர்க்கார் அப் பிரச்னையைக் கை கழுவ முற்படுவது தகாது, தருமமாகாது, நியாயமுமாகாது.

சமூக வளர்ச்சிக்கே அஸ்திவாரமான பள்ளிக்கூட ஆசிரியர்களின் அந்தஸ்து உயர்ந்தால்தான் அரசாங்கத்தின் அந்தஸ்தும் உயரும்.

# சோலைமலை இளவரசி

கல்கி

## 8. கண்ணீர் கலந்தது!

சென்ற அத்தியாயத்தின் இறுதியில் "குமாரலிங்கம் மாறனேந்தல் இளவரசனாக மாறினான்" என்று குறிப்பிட்டிருந்தோம். உண்மையில் "மாறனேந்தல் மகாராஜாவாக மாறினான்" என்று சொல்லியிருக்க வேண்டும்.

அன்றைய தினம் பகலில் மாறனேந்தல் கோட்டையில் நடந்த துயரகரமான சம்பவங்களின் காரணமாக இளவரசன் உலகநாதத் தேவனை இனி நாம் மகாராஜா உலகநாதத் தேவர் என்று அழைப்பது அவசியமாகிறது.

மாலை எப்போது வரும், மதியம் எப்போது உதயமாகும், மாணிக்கவல்லியின் பாதச் சதங்கை ஒலி எப்போது கேட்கும் என்று உலகநாதத் தேவர் பிற்பகல் எல்லாம் ஆவலுடன் காத்துக்கொண்டிருந்தார். கடைசியாக மாலையும் வந்தது. பின்னர் உலகநாதத் தேவரின் ஆவல் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாகிக் கொண்டிருந்தது. ஒரு வேளை தம்முடைய ஆவல் பூர்த்தியாகாமலேயே போய் விடுமோ, எதிர்பாராத தடை ஏதேனும் நேர்ந்து மாணிக்கவல்லி வராமலிருந்து விடுவாளோ என்ற பயமும் அடிக்கடி தோன்றிக் கொண்டிருந்தது.

ஆனால் அம்மாதிரி உலகநாதத் தேவர் ஏமாற்றமடையும்படி நேரிடவில்லை. கீழ்த்திசைக் குன்றின்மேல் சந்திரன் தோன்றிய சிறிது நேரத்துக்கெல்லாம் அரண்மனைப் பக்கத்திலிருந்து ஒரு பெண்ணின் உருவம் வருவதை அவர் கண்டார்.

இளவரசி நெருங்கி வர வர அவளுடைய நடையிலே ஒரு வித்தியாசம் இருப்பது தெரிந்தது. முன்னே அவளுடைய நடையில் தோன்றிய மிடுக்கும் கம்பீரமும் இப்போது இல்லை. அது மட்டுந்தானா வித்தியாசம்? அன்று காலையும் மத்தியானமும் இளவரசி நடந்தபோதெல்லாம் அவளுடைய காற்சிலம்பு 'கலீர்' 'கலீர்' என்று சப்தித்தது. அந்த ஒலி இப்போது ஏன் கேட்கவில்லை?

வஸந்த மண்டபத்தின் குறட்டில் உட்கார்ந்திருந்த உலகநாதத் தேவர் விரைந்து எழுந்து இளவரசி மாணிக்கவல்லியை எதிர் கொள்ளுவதற்காகச் சென்றார். ஏதோ கெட்ட செய்தியைக் கேட்கப் போகிறோமென்று உள்ளுணர்ச்சி அவருடைய நெஞ்சில் அலைமோதி எழுந்து மார்பை விம்மி வெடிக்கச் செய்தது.

மாலை நேரத்தில் மடலவிழ்ந்து மணம் விரித்த அழகிய மலர்கள்

குலுங்கிய புஷ்பச் செடிகளுக்கு மத்தியில் மாணிக்கவல்லியின் முக மலரை உலகநாதத் தேவர் பார்த்தார்.

அவளுடைய விசாலமான கரிய விழிகள் இரண்டிலும் இரண்டு கண்ணீர்த் துளிகள் ததும்பி நின்று, வெண்ணிலவின் ஒளியில் நன்முத்துக்களைப் போல் பிரகாசித்தன.

அதைக் கண்ட உலகநாதத் தேவர் தம்முடைய உள்ளத்தில் உதித்த உற்பாத உணர்ச்சி உண்மைதான் என்று எண்ணமிட்டார். ஏதோ ஒரு கெட்ட செய்தி, அதுவும் தம்மைப் பற்றிய கெட்ட செய்தி இளவரசியின் காதுக்கு எட்டியிருக்க வேண்டும்!—அதில் சந்தேகமில்லை.

இளவரசியை மறுபடி சந்தித்ததும் ஏதேதோ பரிகாசமாகப் பேச வேண்டுமென்று உலகநாதத் தேவர் யோசித்து வைத்திருந்தார். அவை யெல்லாம் இப்போது மறந்து போயின.

"உன் கண்களில் ஏன் கண்ணீர் ததும்புகிறது?" என்று கேட்பதற்குக் கூட அவருக்கு நா எழவில்லை. கனிந்த சோகத்தினாலும் கண்ணீரினாலும் வெண்ணிலவின் மோகன நிலவினாலும் பதின்மடங்கு அழகு பெற்று விளங்கிய மாணிக்கவல்லியின் முகத்தைப் பார்த்தது பார்த்தபடியே திகைத்துப் போய் நின்றார்.

எனவே, மாணிக்கவல்லிதான் முதலில் பேசும்படியாக நேர்ந்தது. பெருமூச்சுகளுக்கும் விம்மல்களுக்கு மிடையில் சொல்லமல இளவரசி, "ஐயா! தாங்கள் இன்றிரவு இந்தக் கோட்டையை விட்டுப் போக முடியாது. இங்கேதான் இருந்தாக வேண்டும்!" என்றாள்.

அவள் சொல்ல வந்த கெட்ட செய்தியை இன்னும் சொல்லவில்லை என்று ஊகித்துக்கொண்ட உலகநாதத் தேவர், "இன்றிரவு இங்கே நான் எப்படி இருக்க முடியும்? இரவு நேரத்தில் இங்கிருந்து தப்பிச் சென்றால்தானே செல்லலாம்? எனக்குத் தலைக்கு மேலே எத்தனையோ வேலை இருக்கிறதே!" என்றார்.

"அதெல்லாம் எனக்கும் தெரிந்தது தான். ஆனாலும் நீங்கள் இன்றிரவு போக முடியாது. இந்தக் கோட்டையைச் சுற்றிலும் உள்ள மலைகளிலும் காடுகளிலும் இன்று இரவெல்லாம் இருநூறு வீரர்கள் தொண்ணூறு நாய்களுடன் உங்களைத் தேடி வேட்டையாடப் போகிறார்கள்!" என்று இளவரசி சொன்னதும், அது வரையில் பயமென்பதையே அறியாத வீரர் உலகநாதத் தேவரின் நெஞ்சில் பீதிப் பிசாசின் நீண்ட விரல் நகங்கள் தோன்றுவது போலிருந்தது.

விரைவிலேயே அந்த உணர்ச்சியைச் சமாளித்துக் கொண்டு, "தேடினால் தேடட்டுமே! அவர்களிடம் நான் அகப்பட்டுக் கொள்ள மாட்டேன். அப்படியே அகப்பட்டுக் கொண்டாலும் என்னதான் செய்து விடுவார்கள்? சாவுக்குப் பயப்படுகிறவன் நானல்ல!" என்றார் தேவர்.

"ஐயா! தாங்கள் சாவுக்குப் பயப்படாதவர் என்பதை அறிவேன். நானும் சாவுக்குப் பயப்படவில்லை. ஆனால், தங்களை உயிரோடு பிடிக்க வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறார்கள். தங்களைப் பிடித்த பிறகு என்ன செய்ய உத்தேசித்திருக்கிறார்கள் என்பதை அறிந்தால், இப்படி அலட்சியமாகப் பேச மாட்டீர்கள்!" என்று மாணிக்கவல்லி சொன்னபோது அவளுடைய குரல் நடுங்கியது.

உலகநாதத் தேவர் பரிகாசம் தொனித்த குரலில், "என்னை உயிரோடு பிடித்து என்னதான் செய்யப் போகிறார்களாம்? பழைய காலத்துக் கதைகளில் செய்தது போல் பூமியில் குழி வெட்டிப் புதைத்து யானையின் காலால் இடறச் செய்யப் போகிறார்களோ?" என்று கேட்டார்.

"அப்படிச் செய்தால் கூடப் பாதகமில்லை. இன்னும் கொடுமையான காரியம் செய்யப் போகிறார்கள். அதைச் சொல்லுவதற்கே என்னால் முடியவில்லை. அவ்வளவு பயங்கரமான காரியம்!" என்றாள் மாணிக்கவல்லி.

இவ்விதம் சொல்லியபோதே அவளுடைய உடம்பு நடுங்குவதையும்




அவன் முகத்திலே தோன்றிய பயங்கரத்தின் அறிகுறியையும் பார்த்துவிட்டு உலகநாதத் தேவர் பரிகாசத்தையும் அலட்சிய பாவத்தையும் விட்டுவிடத் தீர்மானித்தார்.

"எந்தவிதப் பயங்கர தண்டனையாக இருந்தாலும் இருக்கட்டும். அதற்காக நீ இப்படி மனம் கலங்க வேண்டாம். எல்லாம் சோலைமலை முருகன் சித்தப்படிதான் நடக்கும்....இதையெல்லாம் உனக்கு யார் சொன்னார்கள்?" என்று தேவர் கேட்டார்.

"அரண்மனை அந்தப்புரத்தைத் தேடி வந்து வேறு யார் என்னிடம் சொல்லுவார்கள்? என் தகப்பனார் தான் சொன்னார்!" என்று இளவரசி கூறியபோது, அவளுடைய கண்களிலேயிருந்து கண்ணீர் அருவியாகப் பெருகிற்று.

அந்தக் காட்சியானது உலகநாதத் தேவரின் உள்ளத்தை உருக்கி விட்டது. தாம் இருந்த அபாயகரமான நிலைமையைக்கூட அவர் மறந்து, இளவரசியின் மீது இரக்கம் கொண்டார். அந்த இரக்க உணர்ச்சியே அழியாத காதலுக்கு விதையாக உருக்கொண்டது.

சட்டென்று தம்முடைய தாய் தந்தையரைப் பற்றிய நினைவு அவருடைய உள்ளத்தில் உதித்தது. மாறனேந்தல் கோட்டை பிடிபட்டதோ, என்னமோ? தம்முடைய பெற்றோர்களின் கதி என்னவாயிற்றோ? தம் அருமைத் தம்பியைப் பாவிகள் என்ன செய்தார்களோ?

இளவரசியின் விம்மலும் கண்ணீரும் நிற்கும் வரையில் சிறிது பொறுத்திருந்து விட்டு, "நீ கூறியதிலிருந்து உன் தந்தை திரும்பி வந்து விட்டார் என்று தெரிகிறது. மாறனேந்தல் கோட்டையைப் பற்றி அவர் ஏதும் சொல்லவில்லையா? என் தாய் தந்தையரைப் பற்றி ஒரு செய்தியும் கூறவில்லையா?" என்று கேட்டார்.

"ஐயோ! இந்தப் பாவியின் வாயினால் அதையெல்லாம் எப்படிச்

சொல்லுவேன்?" என்று கதறினாள் மாணிக்கவல்லி.

தாம் எதிர்பார்த்த கெட்ட செய்தி இப்போதுதான் வரப்போகிறது என்பதை உணர்ந்த மாறனேந்தல் மன்னர், "மாணிக்கவல்லி! எப்படிப்பட்ட கெட்ட செய்தியானாலும் தயங்காமல் சொல்லு! மாறனேந்தல் வம்சத்தினர் வீராதி வீரர்கள் என்று புகழ் பெற்றவர்கள். அந்தக் குலத்திலே பிறந்த இளவரசன் நான்! எதற்கும் மனங் கலங்க மாட்டேன். உண்மையை அறிந்து கொள்ள என் உள்ளம் துடிக்கிறது. ஏதோ என்னமோ என்ற சந்தேகம் என்னைக் கொல்லுகிறது!" என்றார்.

"ஐயா! தாங்கள் இப்போது மாறனேந்தல் இளவரசர் அல்ல. இன்று முதல் தாங்கள்தான் மாறனேந்தல் மகாராஜா!" என்று மாணிக்கவல்லி விம்மிக்கொண்டே கூறினாள்.

இளவரசி கூறியதன் பொருள் இன்னதென்று உலகநாதத் தேவருக்கு விளங்கச் சிறிது நேரம் பிடித்தது. விளங்கியவுடனே தேவரின் தலையில் ஒரு பெரிய மலையே விழுந்தது போல் ஆயிற்று. ஏதோ ஒரு துயரச் செய்தியை அவர் எதிர்பார்த்தவர்தான். என்றாலும், தந்தை இறந்தார் என்னும் செய்தி, தனயரை ஒரு ஆட்டம் ஆட்டி விட்டது! இதுவரையில் நின்று கொண்டே பேசியவர், திடீரென்று உடல் ஓய்ந்து தரையில் உட்கார்ந்தார். எவ்வளவு அடக்கப் பார்த்தும் முடியாமல் தேம்பலும் விம்மலும் பொங்கி வந்தன.

இளவரசியும் அவர் அருகில் உட்கார்ந்து அவரைத் தேற்றுவதற்கு முயன்றாள். அப்போது அவ்விருவருடைய கண்ணீரும் கலந்து ஒன்றாகும்படி நேர்ந்தது.

உலகநாதத் தேவர் சீக்கிரத்திலேயே தம்மைத் தேற்றிக் கொண்டார். கொஞ்சங் கொஞ்சமாக இளவரசியைத் தூண்டிக் கேட்டு, அவளுடைய தந்தையின் மூலம் அவள் அறிந்த எல்லா விவரங்களையும் தாமும் தெரிந்து கொண்டார்.



# 9. வெறி முற்றியது!

அன்று பிற்பகலில், அஸ்தமிக்க இன்னும் ஒரு ஜாமம் இருந்தபோது, சோலைமலை இளவரசி தன்னுடைய படுக்கை அறை மஞ்சத்தில் விரித்திருந்த பட்டு மெத்தையில் படுத்து அப்படியும் இப்படியும் புரண்டு கொண்டிருந்தாள். சூரியன் எப்போது மலைவாயில் விழுந்து தொலையும், எப்போது சந்திரன் குன்றின் மேலே உதயமாகும் என்று அவளுடைய இதயம் ஏங்கித் துடித்துக் கொண்டிருந்தது. இளம் பிராயம் முதல் மாணிக்கவல்லியை எடுத்து வளர்த்து உயிருக்குயிராய்க் காப்பாற்றி வந்த செவிலித் தாய் அப்போது அங்கு வந்தாள். மாணிக்கவல்லியின் நிலையைப் பார்த்துவிட்டு, "அம்மணி! ஏதாவது உடம்புக்கு வந்திருக்கிறதா? முகம் ஒருமாதிரி பளபளவென்று இருக்கிறதே? கண் சிவந்திருக்கிறதே?" என்று கேட்டாள்.

"ஆமாம், வீரம்மா! உடம்பு சரியாகத்தான் இல்லை. அதோடு மனதும் சரியாக இல்லை!" என்றாள் இளவரசி.

"உடம்பு சரியில்லாவிட்டால், மகாராஜா வந்ததும் வைத்தியனைக் கூப்பிட்டுப் பார்க்கச் சொல்லலாம். ஆனால், மனதிற்கு என்ன வந்தது? ஏதாவது கவலையா, கஷ்டமா? குறையா, குற்றமா? மகாராஜா அப்படியெல்லாம் உனக்கு ஒரு குறையும் வைக்கவில்லையே? கண்ணுக்குக் கண்ணாய் வைத்து உன்னைக் காப்பாற்றி வருகிறாரே?" என்று வீரம்மா கேட்டாள்.

"அப்பா எனக்கு ஒரு குறைவும் வைக்கவில்லைதான். என்னைப் பற்றிய கவலை ஒன்றுமில்லை. சற்று முன்னால் மாறனேந்தல் சண்டையைப் பற்றி ஞாபகம் வந்தது. அதனால் வருத்தமாயிருக்கிறது!" என்றாள் இளவரசி.

"லட்சணந்தான், போ! மாறனேந்தல் சண்டைக்கும் உனக்கும் என்ன வந்தது? அதைப் பற்றி நீ ஏன் வருத்தப்பட வேண்டும்?" என்று கேட்டாள் வீரம்மா.

"ஏன் என்று நீயே கேட்கிறாயே? மாறனேந்தல் மகாராஜா குடும்பத்தைப் பற்றி நீதானே அடிக்கடி எனக்குச் சொன்னாய்! அவர்களுக்கும் நமக்கும் விரோதம் வந்தது பற்றி நீதானே வருத்தப்பட்டாய்? மாறனேந்தல் கோட்டையை நம்முடைய வீரர்களும் வெள்ளைக்காரர்களும் சேர்ந்து முற்றுகை போட்டிருக்கிறார்களாமே? மாறனேந்தல் மகாராஜாவுக்கும் அவருடைய குடும்பத்துக்கும் என்ன கதி நேர்ந்ததோ என்று நினைத்தால் வருத்தமாயிருக்கிறது!" என்றாள் மாணிக்கவல்லி.

"அதற்காக நீயும் நானும் வருத்தப்பட்டு என்ன செய்வது, கண்ணே! எல்லாம் விதியின்படி நடக்கும். ஐந்தாறு வருஷத்துக்கு முன்னால் இரண்டு வம்சத்தாரும் எவ்வளவோ ஒற்றுமையாயிருந்தார்கள். அக்கரைச் சீமையிலிருந்து தலையிலே குடையைக் கவிழ்த்துக் கொண்டு இந்த வெள்ளைக்காரச் சாதியார் வந்த பிறகுதான் இரண்டு வம்சங்களுக்கும் இப்படிப்பட்ட விரோதம் ஏற்பட்டது. மூன்று மாதத்துக்கு முன்னாலேகூட என் தங்கச்சியைப் பார்க்க மாறனேந்தல் போயிருந்தேன். அங்கே எல்லாரும் உலகநாதத் தேவரைப் பற்றி எவ்வளவு பெருமையாகப் பேசிக்கொள்கிறார்கள், தெரியுமா? மன்மதன் மாதிரி லட்சணமாம்! குணத்திலே தங்கக் கம்பியாம்! வாயைத் திறந்து இரண்டு வார்த்தை பேசினால் பசி தீர்ந்துவிடுமாம்!......"

"போதும் வீரம்மா, போதும்! இப்படியெல்லாம் பேசிப் பேசித்தான் என் மனதில் என்னவெல்லாமோ ஆசையை நீ கிளப்பிவிட்டாய்!"

"அதற்கென்ன செய்யலாம், கண்ணே! உலகமெல்லாம் தேடினாலும் உலகநாதத் தேவரைப் போன்ற மாப்பிள்ளை கிடைப்பது சிரமம். அப்படிப்பட்டவருக்கு வாழ்க்கைப்பட நீ கொடுத்து வைக்கவில்லை. இரண்டு ராஜ்யங்களுக்கும் ராணியாகும் பாக்கியம் உனக்குக் கிட்டவில்லை. வெள்ளம் தலைக்குமேலே போய்விட்டது. நான் சொன்னதையெல்லாம் அடியோடு மறந்து விடு!......"

"சொல்லுவதையெல்லாம் சொல்லி விட்டு 'மறந்து போய்விடு' என்று சொன்னால் எப்படி மறக்க முடியும், வீரம்மா! அது போகட்டும், சண்டை சமாசாரம் ஏதாவது உனக்குத் தெரியுமா? தெரிந்தால் சொல்லு!" என்று இளவரசி கேட்டாள்.

"மாறனேந்தல் கோட்டை இன்று காலையே பிடிபட்டு விட்டது என்று சொல்லிக் கொள்கிறார்கள். பாவம்! மாறனேந்தல் மகாராஜாவும் மகாராணியும் இரண்டு இராஜ குமாரர்களும் என்ன கதி அடைந்தார்களோ?" என்று வீரம்மா சொல்லிக் கொண்டிருந்த போது, சோலைமலை மகாராஜாவின் பாதரட்சை சத்தம் சமீபத்தில் 'கிறீச்' 'கிறீச்' என்று கேட்டது. உடனே வீரம்மா தன் வாயை மூடி அதன்மேல் விரலை வைத்து 'பேசாதே!' என்று சமிக்ஞை காட்டி விட்டு அங்கிருந்து சென்றாள்.

மகாராஜா அறைக்குள்ளே வந்ததும், இளவரசி எழுந்து நின்று வணங்கினாள். "மாணிக்கம்! ஏன் முகம் ஒரு மாதிரி இருக்கிறது? உடம்புக்கு ஒன்றுமில்லையே?" என்று மகாராஜா கேட்டார்.

மாணிக்கவல்லி உள்ளுக்குள் பயத்துடனே, "ஒன்றுமில்லை, அப்பா!" என்று சொன்னாள்.

"ஒன்றுமில்லை யென்றால் முகம் ஏன் வாடி யிருக்கிறது? வீரம்மா எங்கே? அவள் உன்னைச் சரியாகக் கவனித்துக் கொள்வதில்லை போலிருக்கிறது!" என்று கோபக் குரலில் மகாராஜா கூறினார்.

"இல்லை, அப்பா! வீரம்மா எப்போதும் என்னுடனேதான் இருக்கிறாள். சற்று முன்கூட இங்கே இருந்தாள். நீங்கள் வரும் சத்தம் கேட்ட பிறகுதான் சமையற் கட்டுக்குச் சென்றாள். அப்பா! முன்னே யெல்லாம் நீங்கள் அடிக்கடி என்னைப் பார்க்க வருவீர்கள். என்னுடன் பேசிக்கொண் டிருப்பீர்கள். என்னைக் கதை வாசிக்கச் சொல்லிக் கேட்பீர்கள். அங்கே இங்கே அழைத்துப் போவீர்கள். இப்போ தெல்லாம் நீங்கள் என்னைப் பார்க்க வருவதே யில்லை. வந்தாலும் நின்றபடியே இரண்டு வார்த்தை பேசிவிட்டுப் போய் விடுகிறீர்கள். எனக்குப் பொழுது போகிறதே இல்லை. அதனாலேதான் உடம்பும் ஒரு மாதிரி இருக்கிறது" என்றாள் மாணிக்கவல்லி.

"ஆமாம், குழந்தை! நீ சொல்லுவது மெய்தான். இப்போது நான் எடுத்திருக்கும் காரியம் மட்டும் ஜயத்துடன் முடியட்டும். அப்புறம் முன் போல் அடிக்கடி இங்கே வந்து உன்னுடன் பேசிக் கொண்டிருப்பேன். உனக்குத் தகுந்த மாப்பிள்ளை கூடிய சீக்கிரம் நான் பார்த்தாக வேண்டும். இந்தச் சண்டை முடிந்த உடனே அது தான் எனக்குக் காரியம்!" என்று மகாராஜா சொல்லி விட்டுப் புன்னகை புரிந்தார்.

இளவரசி முகத்தைச் சுளுக்கிக் கொண்டு, "அதற்கு அவசரம் ஒன்று மில்லை, அப்பா! உங்களை விட்டுப் பிரிந்து எங்கேயாவது தொலை தூரத்துக்குப் போவதற்கு எனக்கு மனமில்லை. ஆனால், சண்டை இன்னமும் முடியவில்லையா? மாறனேந்தல் கோட்டை இன்று காலை பிடிபட்டு விட்டதென்று வீரம்மா சொன்னாளே?" என்றாள்.

"ஆமாம்; கோட்டை பிடிபட்டு விட்டது. அந்த மடையன் மாறனேந்தல் மகாராஜாவும் கடைசியில் தன்னந் தனியாக வாளேந்திச் சண்டை போட்டுச் செத்தொழிந்தான். ஆனால் நான் எந்தக் களவாணித் திருட்டுப் பயலைப் பிடிக்க வேண்டும் என்று எண்ணியிருந்தேனோ, அவன் பிடிபடவில்லை! இரவுக் கிரவே தப்பி ஓடி விட்டான். ஆனாலும் எங்கே ஓடி விடப் போகிறான்? எப்படியும் அகப்பட்டுக் கொள்வான்! அவன் மட்டும் என் கையில் சிக்கும்போது......" என்று சொல்லிச் சோலைமலை மகாராஜா பற்களை நறநறவென்று கடித்தார்.

இளவரசி சகிக்க முடியாத மனவேதனை யடைந்தாள். அதை வெளிக் காட்டிக் கொள்ள முடியாததனால் வேதனை அதிகமாயிற்று. பேச்சை மாற்ற விரும்பி, "மகாராணியும் இரண்டாவது பிள்ளையும் என்ன ஆனார்கள்?" என்று கேட்டாள்.

"அவர்கள் இருவரையும் வெள்ளைக்கார தடியர்கள் கைப்பற்றிக் கொண்டார்கள். அவர்களைச் சென்னைப் பட்டணத்துக் கோட்டைக்குப் பந்

தோபஸ்துடன் அனுப்பிவைக்கப் போகிறார்களாம்! இல்லாவிட்டால் அங்கே யிருக்கும் பெரிய துரை கோபித்துக் கொள்ளுவாராம்! அவர்களை மட்டும் என்னிடம் ஒப்படைத்திருந்தால், அந்தத் திருட்டுப் பயல் உலகநாதத் தேவன் எங்கே போனான் என்பதை அவர்கள் வாய்மொழியாகவே கறந்திருப்பேன். இப்போது தான் என்ன? அவன் நேற்று இரவு நமது கோட்டைக்கு அருகாமையில் வந்தவரைக்கும் தடையம் கிடைத்திருக்கிறது. நமது கோட்டையைச் சுற்றியுள்ள காடு மலைகளிலேதான் அவன் ஒளிந்திருக்க வேண்டும். இன்று இரவு இருநூறு ஆட்கள் தொண்ணூறு நாய்களுடன் அவனை வேட்டையாடப் போகிறார்கள். அவன் எப்படித் தப்புவான் என்று பார்க்கலாம்!"

இவ்விதம் சொல்லி மகாராஜா, "ஹா ஹா ஹா" என்று சிரித்தது, பேய்களின் சிரிப்பைப் போல் பயங்கரமாக ஒலித்தது.

மாணிக்கவல்லியின் உள்ளத்தை அரித்துக் கொண்டிருந்த வேதனை, கவலை இவற்றுடன் இப்போது ஆவலும் பரபரப்பும் சேர்ந்து கொண்டன.

"மாறனேந்தல் இளவரசர் அகப்பட்டால் அவரை என்ன செய்வீர்கள்?" என்று கேட்டாள்.

"நல்ல கேள்வி கேட்டாய், மாணிக்கம்! நல்ல கேள்வி! அதைப் பற்றித்தான் நானும் யோசித்துக் கொண்டிருந்தேன். யோசித்து ஒரு முடிவும் செய்துவிட்டேன். அவனை நமது கோட்டை வாசலுக்கு அப்பாலுள்ள ஆலமரத்தின் கிளையில் தூக்குப் போடப் போகிறேன். தூக்கில் மாட்டியவுடனே அவன் செத்து விடுவான்! ஆனாலும் அவன் உடலை மரக் கிளையிலிருந்து இறக்க மாட்டேன். அங்கேயே அவன் தொங்கிக் கொண்டிருப்பான். கழுகும் காக்கையும் அவன் சதையைக் கொத்திக் கொத்தித் தின்ற பிறகு எலும்புக் கூட்டைக் கூட எடுக்க மாட்டேன்! சோலைமலை மகாராஜாவை அவமதித்தவனுடைய கதி என்ன ஆகும் என்பதை உலகம் எல்லாம் அறியும்படி, அவனுடைய எலும்புக் கூடு ஒரு வருஷமாவது நமது கோட்டை வாசலில் தொங்க வேண்டும்!" என்றார் மகாராஜா.

சொல்ல முடியாத பயங்கரத்தையும் அருவருப்பையும் அடைந்த மாணிக்கவல்லி கம்மிய குரலில், "அப்பா! இது என்ன கோரமான பேச்சு!" என்றாள்.

"பேச்சு இல்லை, மாணிக்கம்! வெறும் பேச்சு இல்லை! நான் சொன்னபடியே செய்கிறேனா, இல்லையா என்று பார்த்துக் கொண்டிரு! இதோ, நான் போய் இராத்திரி வேட்டைக்கு ஆயத்தம் செய்ய வேண்டும். நீ உன் உடம்பைக் கவனமாகப் பார்த்துக் கொள். வீரம்மா உன்னைச் சரியாகக் கவனித்துக் கொள்ளாவிட்டால், அந்தக் கழுதையைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளிவிட்டு வேறொருத்தியை வைக்கிறேன், தெரிகிறதா?" என்று சொல்லிவிட்டுச் சோலைமலை மகாராஜா மறுபடியும் 'பாதரட்சை 'கிறீச்' 'கிறீச்' என்று சப்திக்க வெளியேறினார்.

மகாராஜா போன பிறகு இளவரசி சிறிது நேரம் பிரமை பிடித்தவள் போல் உட்கார்ந்திருந்தாள். கொஞ்சங் கொஞ்சமாகப் பிரமை நீங்கிப் புத்தி தெளிவடைந்தது.

இன்று முதல் மாறனேந்தல் மகாராஜாவாகி விட்ட உலகநாதத் தேவருக்கு நேர்ந்துள்ள பெரிய அபாயத்தை நினைக்க நினைக்க அவரை அந்த அபாயத்திலிருந்து எப்படியாவது தப்புவிக்க வேண்டும் என்பதில் அவளுடைய உறுதி வலுவடைந்தது.

அன்று காலையிலேயே அவளுடைய உள்ளத்தில் உதித்திருந்த காதல் வெறி வளர்ந்து முதிர்ந்தது.

யோசித்து யோசித்துப் பார்த்து, உலகநாதத் தேவரைக் காப்பாற்ற ஒரே ஒரு வழிதான் உண்டு என்பதை அவள் உணர்ந்தாள். அவரைச் சில நாள் வரையில் கோட்டைக்குள்ளேயே இருக்கும்படி செய்தாக வேண்டும். தந்தையின் கோபம் சிறிது தணிந்த பிறகு, அவருக்குத் தன்னிடம் உள்ள அன்பைப் பயன்படுத்தி, அவருடைய பழி வாங்கும் உத்தேசத்தைக் கைவிடச் செய்ய வேண்டும். — இந்த வழியைத் தவிர வேறு வழி கிடையாது என்று இளவரசி உறுதி செய்து கொண்டாள். பிறகு முன்னைவிட அதிக ஆவலுடன் அவள் இரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

(தொடரும்)

# அரங்கருக்கு ஒரு கேள்வி

எஸ். வி. எஸ்.

"ஸார், யாரையாகிலும் கேள்வி கேட்க வேண்டும் என்று தோன்றினால் உடனே கேட்டுவிட வேண்டும். மனதில் வைத்துக் கொண்டு சிரமப்படக் கூடாது!" என்று சொல்லுவார் என் நண்பர் ஒருவர்.

எனக்கு நெடு நாட்களாக ஸ்ரீ ரங்கநாதரை ஒரு கேள்வி கேட்க வேண்டுமென்று இருந்தது. நண்பரின் யோசனைப்படி அதை உடனே கேட்டு விடுவதென்று சென்ற ஜனவரி 31-ம் தேதி கிளம்பினேன்.

ரயிலில் என்னுடன் பிரயாணம் செய்து கொண்டிருந்த சிலர், ஸ்ரீரங்கத்தில் ஹரிஜனங்களுக்கு அரங்கர் தரிசனம் அருளப் போவதைப் பற்றி உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்தனர். அதைக் கேட்டு நான் அடைந்த மகிழ்ச்சி சிறிது நேரம்கூட நீடிக்கவில்லை. காரணம், எதிர்ப்பும் ரொம்பக் கடுமையாக இருக்கும் போலிருக்கிறது என்று சிலர் தாழ்ந்த குரலில் பேசிக் கொண்டதுதான்!

பிப்ரவரி 1உ காலை நான் திருச்சியில் ஒரு நண்பர் வீட்டில் போய் இறங்கினேன். ஸ்நானம் செய்வதற்குக் குழாயைத் திருப்பினால் ஜலம் வரவில்லை. "ஏன்?" என்று கேட்டேன்.

"இன்று அரங்கர் ஹரிஜனங்களுக்குத் தரிசனம் அளிக்கப் போகிறாரோ இல்லையோ, அதற்காகத் தண்ணீர் அதிகமாக விட்டால் சில காரிருள திலகங்கள் மிளகாய்ப் பொடி கரைத்து விடுவார்களோ என்று பயம்!" என்று சிரித்துக்கொண்டே சொன்னார் அவர்.

இதுமட்டுமல்ல; திருச்சியிலிருந்து நான் ஸ்ரீரங்கத்துக்குப் பஸ்ஸில் வந்து கொண்டிருந்தபோது, "நாலு ரூபாய் வித்த மிளகாய் இன்று எட்டு ரூபாயாம்; காரணம் தெரியுமோ இல்லையோ?" என்றார் ஒருவர்.

"தெரியாமலென்ன, ஸார்! மிளகாயை ஏகமாக வாங்கிப் பொடி பண்ண ஆரம்பித்து விட்டார்களாக்கும்!" என்றார் மற்றொருவர்.

இம்மாதிரி பேச்சுக்களில் உண்மைக் கலப்பே இல்லாமலிருக்கலாம். ஆனால், பொது ஜனங்கள் ஹரிஜன ஆலயப் பிரவேசத்துக்கு எதிர்ப்பு என்று சொன்னால், அதை எவ்வளவு கேலிக்கு இடமான விஷயமாக மதிக்கிறார்கள் என்பது இதிலிருந்து தெரிந்தது. அத்துடன் இவ்வளவு கேலியாகப் பேசும்போதே அவர்கள் ஹரிஜன ஆலயப் பிரவேசத்துக்கு எவ்வளவு உற்சாகமாக ஆதரவு அளிக்கிறார்கள் என்பதும் அதில் பொதிந்து கிடக்கிறதல்லவா?

சென்னை சர்க்கார் அன்று எவ்வளவு தூரம் எதிர்ப்பை எதிர்பார்த்தார்கள் என்பது, அவர்கள் ஸ்ரீ ரங்கநாதரின் கோபுர வாசலிலும் பிராகாரங்களிலும் கோவில் உள்ளேயுங்கூட மலபார் ஸ்பெஷல் போலீஸ் படைகளை ஏராளமாக வைத்திருந்ததிலிருந்தே ஒருவாறு ஊகிக்க முடிந்தது. ஆனால், ஸ்ரீரங்க வாசிகள் ஹரிஜனங்களை உற்சாகத்துடன் வரவேற்றதின் மூலம் அவர்களுடைய நம்பிக்கையைச் சிதற அடித்துவிட்டார்கள். ஒரு வேலையும் இல்லாத போலீஸார் கோவிலுக்குள் புகை பிடித்துக் கொண்டும், எச்சில் துப்பிக் கொண்டும் அசுத்தம் செய்தது, அந்தப் புனித நாளில் மிக அருவருப்பாக இருந்தது.

* * *

'தூட் தடதட தட்' என்ற முரசொலி காலை சரியாகப் பத்தரை மணிக்குக் கேட்டது. கோவில் பிராகாரத்தில் நெற்றியில் விசாலமான திருமண் இட்டு, அகன்ற காதுகளில் சங்கு சக்கர முத்திரைகள் வரையப்பட்டு அழகாக விளங்கிய இரு யானைகள் மந்திரிக் குழுவையும் ஹரிஜன பக்தர்களையும் வரவேற்பதற்காகக் கோபுர வாசலுக்கு வெளியே வந்தன. ஸ்ரீரங்கம் நகரசபை சேர்மன் ஸ்ரீனிவாஸ அய்யங்கார், எக்ஸிக்யூடிவ் ஆபீஸர் முதலியவர்கள் வந்து நின்றார்கள். பொது ஜனங்கள் நடுவில் இடம் விட்டு சக்கர வட்டமாகச் சுற்றி நின்றார்கள்.



அப்போது ஒரு கறுப்புத் துணி என் கண்ணில் பட்டது. "இது என்ன கூத்து?" என்று பக்கத்திலிருந்தவரைக் கேட்டேன். "அது கறுப்புத் துணி இல்லை, ஐயா! புகைப்படக்காரர் ஒருவர், ஸ்டாண்டில் பொருத்திய 'காமிரா'வைக் கறுப்புத் துணி கொண்டு மூடி இங்கு மங்கும் அலைந்து கொண்டிருக்கிறார் 'கோணம்' பார்ப்பதற்காக!" என்று சொல்லி, என் சந்தேகத்தைத் தீர்த்து வைத்தார் இவர்!

இந்தச் சமயத்தில் கோபுர வாசலை அடைந்த நமது மந்திரிகள், சம்பிரதாயப் படி மாலை மரியாதைக்காகவும் போட்டோவுக்காகவும் நின்றுவிட்டார்கள்! ஸ்ரீ வி. ஐ. முனிசாமிப் பிள்ளை நெற்றி நிறையத் திருமண் தரித்து பக்தி புளகிதராய் விளங்கியது எல்லோருக்கும் திருப்பாணாழ்வாரை நினை ஊட்டியது. அந்த நினைவுக்கு ஏற்றாற்போல், அரங்கர் தரிசனம் பெற்றபின் ஆயிரங்கால் மண்டபத்தில் கூடிய கூட்டத்தில் ஸ்ரீ பக்தவத்ஸலம், "இன்றுதான் திருப்பாணாழ்வார் அரங்கனைத் தரிசித்த நன்னாள். இந்த நன்னாளில் ஹரிஜன ஆலயப் பிரவேசம் நடந்தது எவ்வளவோ பொருத்தமானது!" என்று சொன்னபோது, உவகை மேலீட்டினால் உடம்பெல்லாம் புல்லரித்தது.

அவருக்குப் பிறகு, "இந்த நன்னாளில் ஆங்கிலத்தில் பேச எனக்கு விருப்பமில்லை" என்று சொல்லி, தெலுங்கில் பேசினார் ஸ்ரீ கூர்மையா. அவருக்குப் பிறகு பேசிய கோடி செட்டி தெலுங்கில் பேசச் சொல்லியும், "நான் ஆங்கிலத்தில்தான் பேசுவேன்!" என்று பிடிவாதம் பிடித்தார். "ஜனவரி மாதம் 26-ம் தேதி சுதந்திர தினத்தன்று திறக்க இருந்த ஆலயத்தை அன்று திறக்க இயலாமற் போனதற்குக் காரணம், சர்க்கார் காரியாலயங்களில் சாதாரணமாக ஏற்படும் கால தாமதம் தான்!" என்று அவர் சொன்னபோது, "நடப்பது காங்கிரஸ் சர்க்காராயிருந்தும் இவ்வளவு முக்கியமான விஷயத்தில் 'வெப்பு டாடா' குறுக்கிட்டது என்று ஒரு மந்திரி சொல்லிக் கொள்ள வெட்கமாக இல்லையா?" என்றார் என் பின்னாலிருந்த ஒருவர்.

"கோலமணி ஆரமும் முத்துத்
தாமமும்முடிவில்லதோர் எழில்
நீலமேனி ஐயோ! நிறை
கொண்டதென் நெஞ்சினையே!"

என்று திருப்பாணாழ்வார் அன்று அரவணை மேல் பள்ளிகொண்ட அரங்கனைக் கண்டு களித்துப் பாடினார். இன்று அரங்கனைத் தரிசித்த ஸ்ரீ முனிசாமிப் பிள்ளை, "என் உள்ளம் இன்று பெருவகையில் நிறைந்திருக்கிறது; எனக்குப் பேச வார்த்தையே வரவில்லை!" என்றார்.

மூன்றாவதாகப் பேசிய ஹரிஜன பக்தர் ஸ்ரீ ஸஹஜானந்தா, "நான் ருக்வேதம் படித்திருக்கிறேன்; யஜுர் வேதம் படித்திருக்கிறேன்; ஸாம வேதம் படித்திருக்கிறேன்; அதர்வண வேதம் படித்திருக்கிறேன்; புராணம் படித்திருக்கிறேன்; இதிகாசம் படித்திருக்கிறேன்; அதைப் படித்திருக்கிறேன், இதைப் படித்திருக்கிறேன்!" என்று ஆரோகண அவரோகணக் கிரமத்தில் மாறி மாறிச் சொன்னபோது, சபையில் ஒரே கலகலப்பாயிருந்தது.

பின்னர் ஸ்ரீமதி கோடி செட்டி அம்மையார், ஸ்ரீ ஹாலாஸ்யம் முதலியவர்கள் பேசிய பிறகு, கூட்டம் 'பத்திரிகை பாஷை'யில் 'இனிது முடிந்தது.'

அன்று ராமானுஜர், "யான் கண்ட உண்மையை, யான் பெற்ற இன்பத்தை எல்லோரும் காணட்டும், எல்லோரும் அநுபவிக்கட்டும்!" என்று ஸ்ரீ ரங்கநாதர் கோபுரத்தின் மேலிருந்து ஜனங்களை அறைகூவி அழைத்தார். "இதனால் என்ன பாவம் வந்தாலும் நான் அநுபவிக்கிறேன்!" என்று உள்ளம் பொருமினார். அத்தகைய 'ராமானுஜ'ரின் திருவுள்ளத்தை ஜனவரி 26-ந்தேதி டில்லியிலிருந்து வெளியான ராஜாஜியின் அறிக்கையில் எல்லோரும் கண்டார்கள். "ஹரிஜனங்கள் தரிசனம் பெறுவதற்காக ஸ்ரீ ரங்கநாதரின் கோயிலைத் திறந்து விடுவதில் பழியோ பாவமோ உண்டென்றால் அது என்னைச் சேரட்டும்!" என்று அவர் அந்த அறிக்கையில் குறிப்பிட்டிருந்தார்.

ஹரிஜன ஆலயப் பிரவேசக் கோலாகலங்களெல்லாம் ஒருவாறு முடிந்த பிறகு, அன்றிரவே நான் சென்னைக்குத் திரும்பினேன். 'கூருக்' என்று கூவிக்கொண்டு ரயில் கிளம்பியபோது, "அடாடா, அரங்கனை ஒரு கேள்வி கேட்கவேண்டும் என்று இவ்வளவு தூரம் வந்து, கடைசியில் கேட்காமலே போய்விடுகிறோமே!" என்று நினைவு வந்தது.

ஆனாலும் பாதகமில்லை, அந்தக் கேள்வி அப்படியொன்றும் புதிதல்ல; ஆயிரமாயிரம் சங்கீத மேடைகளிலும் நடன அரங்குகளிலும் கேட்கப்படும் "ஏன் பள்ளி கொண்டீர், ஐயா?" என்ற கேள்விதான் அது!

# மூன்று கேள்விகள்

தே. வீ.



மதுரையில் நெடுஞ்செழியன் என்ற ஒரு பாண்டிய மன்னன் இருந்தான். அவனிடம் ஒரு பெரிய காலாட் படை இருந்தது. அந்தப் படையில் ஒரு சிங்களவப் போர் வீரனும் இருந்தான். அவன் புதிதாகப் படையில் சேர்ந்தவன். அதனால் அவனுக்குத் தமிழ் மொழி தெரியாது. அவனும் தமிழை விரைவில் கற்றுக் கொள்ள முயற்சி செய்யவில்லை.

அடுத்த நாள் நெடுஞ்செழியன் காலாட் படையைப் பார்வையிடப் போவதாகச் செய்தி வந்தது. படையில் புதிதாகச் சேர்ந்தவர்களைக் கண்டால் அரசன் வழக்கமாக மூன்று கேள்விகளை ஒன்றன்பின் ஒன்றாகக் கேட்பான். "உன் வயதென்ன?" "நீ படையில் சேர்ந்து எத்தனை காலமாகிறது?" "உனக்கு உண்டி, உடை ஆகிய இரண்டும் தருகின்றார்களா?" என்பவைகளே அக் கேள்விகள்.

தன்னையும் அரசன் அக் கேள்விகளைக் கேட்டால் தனக்குப் பதில் சொல்லத் தெரியாதே என்று அந்தச் சிங்களவப் போர்வீரன் பயப்பட்டான். அப்போது தமிழும் சிங்களமும் தெரிந்த ஒரு போர் வீரன் அவனைப் பார்த்து, "நீ அஞ்ச வேண்டாம். அரசன் எப்போதும் இந்த மூன்று கேள்விகளைத்தான் கேட்பான். அப்படிக் கேட்டால் முதல் கேள்விக்கு 'இருபத்தைந்து' என்றும், இரண்டாம் கேள்விக்கு 'ஒரு வருஷம்' என்றும், மூன்றாவது கேள்விக்கு, 'இரண்டும்தான்' என்றும் பதில் சொல்லிவிடு. அரசன் அத்துடன் சென்று விடுவான்" என்று தமிழில் விடைகளைச் சொல்லிக் கொடுத்தான்.

அடுத்த நாள் படையைப் பார்வையிட வந்த அரசன், படையில் புதிதாகச் சேர்ந்துள்ள சிங்களவப் போர்வீரனைக் கண்டான். ஆனால் வழக்கத்துக்கு மாறாக, "நீ படையில் சேர்ந்து எத்தனை காலம் ஆகிறது?" என்ற இரண்டாவது கேள்வியை முதலில் கேட்டான்.

தமிழ் தெரியாத சிங்களவப் போர் வீரன் தான் உருப் போட்டு வைத்திருந்த முறைப்படி, "இருபத்தைந்து வருஷம்" என்றான். அப்போர் வீரனுக்கு வயதே அவ்வளவு இருக்காதே என்று சந்தேகம் கொண்ட அரசன், "அப்படியானால் உன் வயது என்ன?" என்று கேட்டான். "ஒரு வருஷம்!" என்று போர்வீரன் பதிலளித்தான். மேலும் வியப்படைந்த அரசன். "ஒன்று என் கேள்வியாவது முட்டாள்தனமாயிருக்க வேண்டும்; அல்லது உன் பதிலாவது மடத்தனமாயிருக்க வேண்டும்" என்றான். இதை மூன்றாவது கேள்வியாக எண்ணிக் கொண்ட போர்வீரன், "இரண்டும் தான்!" என்றான்.

இந்தப் பதிலைக் கேட்டதும் அரசனுக்குக் கோபம் அளவு கடந்து விட்டது. நிலைமையை உணர்ந்த சேனைத் தலைவன் குறுக்கிட்டு, அந்தப் போர் வீரன் தமிழில் பதில் சொல்லக் கற்றுக் கொண்ட விதத்தைப் பற்றி அரசனிடம் தெரிவித்தான். அதைக் கேட்ட அரசனும் சிரித்துக் கொண்டே அப்பால் போய்விட்டான்.



# வேண்டுகோள்



வாட்டமே அறியா மனைவியும் வாடவும்,
வறுமையும் பிணியும் மனைதனில் புகவும்,
சிறுமைநான் செய்தேன். தேனினும் இனிப்பினுள்
மறுகிட ஒருநாள் குடிவெறி மயக்கினால்
தடிகொண் டடித்தேன்; சத்தியம் தவறினேன்.
கடையிருந் தால்நான் கடைத்தேற லேது?
பிடியறி விருந்து பிழைத்திட வேறொரு
வழியெனக் இல்லை மக்களின் சார்பாய்
அரசியல் நடாத்தும் அறிஞரும் இந்த
அரக்கனை இன்னும் அழித்திடா தேனோ?
இங்கும் அங்குமாய்த் தடைவிதிக் கின்றார்!
அதனால் வரும்பணம் அடிமையென் போல்வார்
குழந்தைகள் வயிற்றினில் கொட்டிய நெருப்பிலும்,
முதிர்நடை தளர்ந்த முதியோர் பதைப்பிலும்,
மதிநிகர் மனைவியின் வாடிடும் நெஞ்சினில்,
பாய்ச்சிய தீயிலும் பண்ணிய தல்லவோ?
பணமிதைக் கண்ணினால் பார்க்கவும் தகுமோ?
வழியினிற் கடைவலை வைத்தெமைப் பிடிக்கும்
வழிப்பறிக் குதவியாய் வாழ்வதோ அரசு?
சிந்தையை மயக்கித் திருடிடும் பொருளால்
நாட்டினை ஆண்டிடும் நாகரிகத் தோரே!
நொந்திடும் ஏழையின் நிந்தையும் சாபமும்
கள்ளுப் பணத்தினில் கண்டறி யீரோ?—
ஆதலால் மதுவாம் அரக்கினை இன்றே
மாய்த் திடுவீரே! மதியிழந் துள்ளோர்
விலங்கினை உதறி விழிபெற்று
நலங்குலை யாமல் நாட்டினில் வாழவே.

பெ. தூரன்.













# அடிமையின்

எம்மனைக் கேகிடும் இவ்வழி அறிவேன்—
மனைவியும் அங்கே வழிபார்த் திருப்பாள் :
இரவெலாம் என்றனைக் காணா தேங்கிக்
கவலையால் உள்ளம் கசிந்தழு திருப்பாள் ;
குழந்தைகள் இரண்டும் குலைகாய்ந் திருக்கும்,
கண்ணீர் வடித்துக் கதறியே துடிக்கும்.
ஆயினும் அவ்விடம் போயென் செய்வது?
கள்ளின் வெறியிலே கரைந்துபோய் விட்டது.
வாய்வழிந் தோடிய பேய்க்கள் நனைத்திடத்
தலைதனைப் பாதையில் சாய்த்துநான் இரவெல்லாம்
உருண்டு கிடந்தேன் உணர்வில் லாமல் :—
இந்தமு கத்தினைக் கொண்டுநான் இல்லம்
எப்படிச் செல்வது ? என்னைக் கண்டதும்
துயரெலாம் மறைத்துச் சிறுநகை தோன்றிட
வந்தழைத் தேகும் மனைவியின் முன்னே
வெறுங்கை நீட்டினால் பருக்கையும் வேகுமோ ?
வாடிய வயிறுகள் மகிழ்ந்து நிறையுமோ ?
அப்பா எனவரும் அருமைக் குஞ்சுகள்
உப்புக் கூழும் உண்டிட லாகுமோ ?
சீச்சீ இந்தச் சிறுமையேன் செய்தேன் ?
மதியிழந் தொவ்வொரு மாலையும் அந்தக்
கடையினை நோக்கியே காலிழுக் கின்றது.
காலையில் பிறக்கும் உறுதியும் கவலையும்
மாலையில் மறைந்திடும் மாயமேன் தெரியேன்.
மறைந்து மறைந்துநான் வளர்த்தஇப் பழக்கம்
இறுகப் பிடித்தெனை என்றும் அடிமையாய்ச்
செய்ததே அந்தோ ! சீரெலாம் குலைந்தேன்.

# நித்திய கன்னிகை

**லஸ்லு**

குஞ்சம்மாளுக்கு அவளுடைய மூப்பத்தைந்தாவது வயதிலே நிலச்சன் பெண் பிறந்தது. சாக்ஷாத் ஜகன்மாதாவே தனக்குப் பெண்ணாக வந்து பிறந்து விட்டதாக எண்ணி இதயம் பூரித்தாள் அவள். அகௌண்டெண்டு ஜெனரல் விசுவாதய்யருக்கு ஏக புத்திரியாகப் பிறந்த ஜகதாவுக்கு என்ன குறைச்சல்? நாளொரு புதுநகையும் பொழுதொரு அலங்காரமுமாக வளர்ந்து வந்தாள்.

கலாசாலை 'ஸ்டீப'ரிலிருந்து, பிரின்ஸிபால் அம்மாள் வரை எல்லோரும் ஜகதாவினிடத்திலே அன்பும் மதிப்பும் வைத்திருந்தனர். ஆச்சரியப்படத் தக்க விஷயம் இது. கல்லூரியிலே படிக்கும் 'பெரிய மனுஷ்யாள் வீட்டுப் பெண்கள்' ஓர் அலாதியான ரகத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் வயிற்றுப் பிழைப்புக்காக மேல் படிப்புப் படிக்க வருபவர்களல்ல; கல்யாண 'மார்க்கெட்'டிலே மதிப்பு அதிகரிப்பதற்காகவும், பொழுது போக்குக்காகவும் பட்டம் பெற வருபவர்கள். நாளுக்கு ஒரு வித அலங்காரம் செய்து கொண்டு 'பாரேட்' பண்ணுவதிலும், புடவை, நகை கட்டு, 'லேடஸ்டு பாட்டு'க்கள் இவைகளைப் போன்ற ரஸமான விஷயங்களைக் குறித்து விவாதிப்பதிலும்தான் இவர்களுக்கு விருப்பம் அதிகம். இந்தத் திருக் கூட்டத்திலே மேற் சொன்ன விதிகளுக்கு விலக்கான சிலரும் உண்டு — நம் ஜகதாவைப் போல. கல்வி கற்பதிலே ஊக்கம், ஆசிரியர்களிடத்திலே மரியாதை, பொதுக் காரியங்களிலே உற்சாகம் இவைகளை ஜகதாவைப் போன்றவர்களிடத்தில் காணலாம்.

பூரண சந்திரனிடத்திலும் களங்கம் தென்படுகிறதல்லவா? அதுபோல ஜகதாவினிடத்திலும் ஒரே ஒரு குணதோஷ மிருந்தது. அது 'தான் போனதே போக்கு' என்று பிடிவாதம் பண்ணும் வழக்கம்.

மயிலாப்பூர் எட்வர்ட் எலியட்ஸ் ரோடில் இவர்கள் பங்களா; கல்லூரி அதிக தூரமில்லை. ஜகதா காரில்தான் போய் வர வேண்டும், நடந்து போகக் கூடாது என்று தாயார் அபிப்பிராயப்படுவாள். அந்தப் பெண் இதை லக்ஷியம் பண்ணாமல் அநேக நாட்களில் 'ஸ்டுடியோ' என்று நடந்தே கல்லூரிக்குப் போய்விடுவாள்!

சென்னையிலுள்ள கடைகளுக்கெல்லாம் அலைந்து, தன் மனதுக்குப் பிடித்த மாதிரி நூற்றைம்பது ரூபாயில் ஜகதாவுக்கென்று புடவை வாங்கி வருவாள் குஞ்சம்மாள். 'காதி பந்தா'ரிலிருந்து இரண்டு கதர்ப் புடவைகளை வாங்கி வந்து அதைத்தான் உடுத்திக் கொள்வேன் என்று பிடிவாதம் பிடிப்பாள் ஜகதா.

'ஹரிஜன சேவா சங்கம்' என்று கல்லூரியிலே ஒன்று உண்டு. இரண்டு வருஷங்களாக ஜகதா இந்தச் சங்கத்தின் காரியதரிசி. ஸ்ரீமதி கார்த்தியதி என்னும் ஆங்கில



ஆசிரியையின் மேற் பார்வையில் ஏழை மக்களுக்குத் தொண்டாற்றி வந்தது இச் சங்கம். சேரிக் குழந்தைகள் பள்ளிக் கூடத்துக்காக ஒரு கட்டிடம் எழுப்ப அரும் பாடு பட்டு நிதி திரட்டினார்கள். ஒவ்வொரு வருடமும் தன் பிறந்த நாளின்போது, 'அநாமதேயம்' என்ற பெயரில் அந்தச் சங்கத்துக்கு நூறு ரூபாய் அளித்து வந்தாள் ஜகதா. சேரிக்கு அவள் விஜயம் செய்யும்போதெல்லாம் பெண் பிள்ளைகள், 'அம்மா, மகராசி' என்று கூவி அவளை மொய்த்துக் கொள்ளுவார்கள். 'புருஷன் குடிக்காமல் ஒழுங்காகப் பணம் தருகிறானா, குழந்தையின் வயிற்று உப்புசம் எப்படியிருக்கிறது?' என்று ஒவ்வொருத்தியையும் அன்புடன் விசாரிப்பாள் ஜகதா. இந்த நிலையில் ஜகதாவுக்குக் கிடைத்த புகழைக் கண்டு பொறாமைப்பட்ட சில பெண்கள், 'இதெல்லாம் வெறும் வெளி வேஷம். காலேஜுக்குக் காலேஜை விட்டுப் போனால் இவள் சேரிப் பக்கம் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டாள்!" என்று சொல்லித் தங்கள் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ளுவார்கள்!

ஜட்ஜுகளும், திவான்களும் இன்னும் பணம் படைத்த அநேக பெரிய மனிதர்களும் ஜகதாவை மாட்டுப் பெண்ணாகக் கொள்ள எவ்வளவோ பாடு பட்டார்கள். மாப்பிள்ளைகள் அவளை நேரிலே கண்டு பேசிப் பழகினார்கள். பெற்றோர் முன்னிலையில் ஜகதா அவர்களோடு வெகு இனிமையாகப் பேசிவிட்டு, அவர்கள் அப்பால் போனதும் அவர்களைப் பற்றிய தன் உண்மையான அபிப்பிராயத்தைக் கொஞ்சங்கூடத் தயவில்லாமல் தெரிவித்து விடுவாள்.

குஞ்சம்மாள் ஆத்திரம் மேலிட்டவளாய், "ஜகு, இப்படி அடம் பண்ணினாயோ, நீ நித்திய கன்னிகையாகத்தான் இருக்க வேண்டும்! இரண்டு குழந்தைகளுக்குத் தாயாகிற வயசாச்சு; உனக்கு ஏன் இப்படி புத்தி போகிறது?" என்பாள்.

ஜகதா சிரித்துக்கொண்டே, "நித்திய கன்னிகையாக இருந்து விடுவதில் எனக்கு ஆட்சேபணையே இல்லை, அம்மா! உன் குழந்தை எப்போதும் உன்னிடமே இருந்து விடுவதில் நீ சந்தோஷமடைய வேண்டியது தானே?" என்பாள்.





ஜகதாவுக்கு வயது பதினெட்டாகி, பத்தொன்பதும் வந்தது. பி. ஏ. பரீக்ஷைக்குப் படித்துக் கொண்டிருந்தாள். சேரி பள்ளிக்கூடக் கட்டிட வேலை பூர்த்தியாயிற்று. பிரமுகர் ஒருவரைக் கொண்டு திறப்பு விழா நடத்த வேண்டியதுதான் பாக்கி.

இந்தச் சமயத்தில் சிறந்த தேசத் தொண்டரும், மகாத்மாவின் அன்புக்குப் பாத்திரமாகி அவருடைய நிர்மாண திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதிலே ஈடுபட்டவருமான பண்டித நரேந்திரா சென்னைக்கு வந்திருந்தார்.

சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஜகதா அவரை அழைத்துத் திறப்பு விழாவைச் சிறப்பாக நடத்தி வைத்தாள். அவளுடைய புத்திசாலித்தனத்தினால் மனக் கவரப்பட்ட ஸ்ரீ நரேந்திரா, தான் ஆற்றி வரும் தொண்டைப் பற்றிய விவரங்களை அவளுக்கு உற்சாகத்துடன் விளக்கிச் சொன்னார். அவர் சென்னையை விட்

★ ★ ★

## பூர்த்தி செய்தார்!

தற்போது அயர்லாந்தின் பிரதம மந்திரியாக இருக்கும் ஈமன் டிவாலரா, தம்முடைய வாழ்நாளின் பெரும் பகுதியைச் சிறை வாசத்தில் கழித்தவர்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து அவர் நடத்திய சுதந்திரப் போராட்டத்தின்போது, அவர் ஒரு நாளாவது நிம்மதியாகத் தூங்கியதே இல்லை. சில சமயம் சாப்பிடும்போது அவரைக் கைது செய்து கொண்டு போய் விடுவார்கள்; சில சமயம் தூங்கும்போது நள்ளிரவில் எழுப்பி அவரைக் கைது செய்து கொண்டு போய்விடுவார்கள்; சில சமயம் அவர் அரைகுறையாகக் குளித்துக் கொண்டிருக்கும்போதே கைது செய்து கொண்டு போய் விடுவார்கள்.

எந்த நிமிஷமும் அவருக்கு பிரிட்டிஷ் சர்க்காரின் வாரண்டு இருந்து கொண்டே வந்தது. அத்தனை அபாயத்துக்கும் இடையூறுக்கும் மத்தியில், அவர் கொஞ்சமும் மனந் தளராமல் எடுத்த காரியத்தை முடித்துக் கொண்டே வந்தார்.

ஒரு முறை அயர்லாந்தின் தலைநகரமாகிய டப்ளினில் அவர் பேசிக்கொண் டிருந்தபோது, பிரிட்டிஷ் சர்க்கார் அவரைக் கைது செய்தார்கள். ஒரு வருஷத்துக்குப் பின்னால் அவரை விடுதலை செய்தார்கள்.

டிவாலரா விடுதலையடைந்ததும் அவசர அவசரமாக அந்த டப்ளின் நகரத்துக்குப் போனார்.

முன்பு எந்த இடத்தில் பொதுக்கூட்டம் நடந்ததோ, அதே இடத்தில் மீண்டும் ஒரு பொதுக்கூட்டத்தைக் கூட்டி, "சகோதரர்களே, போன வருஷம் நான் சொன்னதுபோல —" என்று ஆரம்பித்தார்.

ஜனங்கள் ஒரே ஆரவாரம் செய்தார்கள்!

★ ★ ★

டுச் சென்ற போது இருவரும் உடன் பிறந்த சகோதர சகோதரிகளைப் போலப் பிரிந்தனர்.

பரீட்சை முடிந்தது; ஜகதாவுக்குத் திவ்யமான வரன் ஒன்று வந்தது. மாப்பிள்ளை சீமையில் ரஸாயன ஆராய்ச்சி செய்து பட்டம் பெற்று வந்தவன்; பம்பாயில் உயர்ந்த உத்தியோகம் பார்த்து வந்தான்; பார்க்க லக்ஷணமாகவுமிருந்தான்.

சம்பிரதாயப்படி மாப்பிள்ளை பெண்ணை வந்து பார்த்துவிட்டுப் போனான். ஜகதா சிந்தனையிலே ஆழ்ந்தவளாய் உட்கார்ந்திருந்தாள். பெண்களுக்குச் சுபாவமான நாணமேலீட்டால் அவள் அப்படி உட்கார்ந்திருக்கிறாள் என்று எண்ணிச் சந்தோஷப்பட்டாள் குஞ்சம்மாள். பெற்றோர் அவள் பதிலுக்காக வாயைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

ஜகதா ஒரு பெருமூச்சுடன், "அப்பா, நீங்களாக வற்புறுத்தினால் ஒழிய நான் இவரைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள மாட்டேன்!" என்றாள்.

குஞ்சம்மாள் வாயடைத்துப் போனாள். விசுவநாதய்யர் சமாளித்துக் கொண்டு, "ஏனம்மா, அவனிடத்திலே குற்றம் சொல்லும்படி ஒன்றுமில்லையே?" என்றார்.

"ஒன்றுமில்லைதான்; செல்லாராம் 'ஜெண்ட்ஸ் டெய்லரிங்'கிலே அவரை ஒரு விளம்பரப் பொம்மையாக நிறுத்தலாம் — வெள்ளைக்காரன் தோற்றுப் போகும்படி உடுத்திக் கொண்டிருக்கிறார்! என்னுடைய நோக்கங்களெல்லாம் அவருக்குப் பிடித்தமாயிராது. 'பப்ளிக் ஸ்பிரிட்' என்று சொல்லுகிறோமே, அது அவரிடத்திலே இம்மியளவும் இல்லை!" என்றாள் ஜகதா.

குஞ்சம்மாள் கோபத்துடன், "என்ன பெண் இவள்? எல்லாம் நீங்கள் இடங்கொடுத்து அவளைக் குட்டிச்சுவராக்கி விட்டீர்கள்! காலா காலத்திலே பெற்றவர்களாகப் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைக்காமற் போனால் இப்படித்தான் போகும்!" என்று ஏதேதோ சொல்லிக் கொண்டே எழுந்து போய்விட்டாள்.

தகப்பனார் பெண்ணைப் பார்த்து, "ஜகு! ஒன்று கேட்கிறேன், கோபித்துக்கொள்ள மாட்டாயே?" என்று தயங்கினார்.

"மாட்டேன்; கேள் அப்பா!"

"புரொபஸர் சேக்கிராவுக்கும் உனக்குமிடையே கடிதப் போக்குவரத்து உண்டென்று எனக்குத் தெரியும். உங்களுக்குள் காதல் கீதல் ஏதாவது ஏற்பட்டிருக்குமானால் சொல். வடதேசத்தவராயிற்றே என்று நான் விவாகத்தை எதிர்க்க மாட்டேன்! எந்த விதத்திலாவது நீ சந்தோஷமாயிருந்தால் அதுவே எனக்குப் போதும்!" என்றார்.

ஜகதா குலுங்கக் குலுங்க நகைத்துக் கொண்டே அவர் அருகில் போய் நாற்காலியின் கைப்பிடியில் அமர்ந்தாள். அவருடைய மோவாயைத் திருப்பி, "அப்பா,

என் முகத்தை நன்றாகப் பார்! எனக்கும் அவருக்கு மிடையே கடிதப் போக்கு வரத்து நடப்பதென்னவோ வாஸ்தவம் தான். ஆனால் அவருக்கு ஏற்கெனவே விவாகமாகி இல்லற வாழ்க்கையும் இன்பமாக நடைபெறுகிறது. சமீபத்தில் குழந்தை கூடப் பிறந்திருப்பதாக எழுதி யிருக்கிறார். எனக்கொரு தமையன் இருந்தால் அவருடன் எப்படிப் பழகி அன்பு செலுத்துவேனோ, அப்படியே சகோதரருடனும் நான் பழகுகிறேன்! இதில் என்ன குற்றம், அப்பா?" என்றாள்.

"இந்த விஷயத்தில் உனக்கும் எனக்கும் குற்றம் தோன்றாம லிருக்கலாம், அம்மா! ஆனால் உலகத்தாருக்குக் குற்றம் தோன்றாமலிருக்க வேண்டுமே!"

"அவர்களைப் பற்றி எனக்குக் கவலையே யில்லை!"

"இதென்ன கூத்து! உலகத்தாரைப் பற்றி யாராவது கவலைப்படாம லிருக்க முடியுமா, என்ன? அதிலும் பொதுஜன சேவையில் இறங்குபவர்கள் கட்டாயம் கவலைப்பட்டாக வேண்டுமே! நீ சரிவர யோசித்துப் பார்க்காமல் இந்த முடிவுக்கு வந்திருக்கிறாய். ஆண்களிடம் குற்றம் கண்டு பிடிப்பதாவது கொஞ்சம் கடினம்; பெண்களிடம் சுலபமாகக் குற்றம் கண்டு பிடித்து விடுவார்கள்! மேலும், பொதுஜன சேவை செய்வதற்கு நித்திய கன்னிகையாக இருக்க வேண்டியது அவசியமே இல்லை. உன்னைப் போல் உலகத்திலே யுள்ள அத்தனை பெண்களும் நித்திய கன்னிகைகளாகவே இருந்து சேவை செய்வது என்று ஆரம்பித்தால் ஜனங்களுக்கு எங்கே போவது? ஆகவே, உனக்குப் பிடித்த ஒருவனை லட்சணமாகக் கல்யாணம் செய்து கொண்டு நீ பொதுஜன சேவையில் இறங்கா விட்டால், நிச்சயமாக உலகத்தார் முன்னிலையில் நீ ஒருபோதும் மன அமைதியுடன் வாழவே முடியாது!"

"என்னைக் கல்யாணம் செய்து கொள்ளும் அந்த மனிதருக்கும் 'பப்ளிக் ஸ்பிரிட்' இருந்தால்தானே அவர் என்னைப் பொதுஜன சேவை செய்ய அனுமதிப்பார்?"

"அவன் ஒருவனை உன்னால் மாற்ற முடியவில்லையானால், நீ ஊராரை மாற்றி விடுவதென்பது பகற் கனவுதான்!"

ஜகதாவுக்குத் தர்மசங்கடமாகப் போய் விட்டது. "போங்கள், அப்பா! என்ன வெல்லாமோ சொல்லி என் மூளையைக் குழப்பி விடுகிறீர்கள்!" என்றாள்.

அந்த வருஷத்துடன் ஜகதாவின் படிப்பு முடிந்து விடவே, அவள் ஹரிஜன சேவா சங்கத்துக்கே தன் முழு நேரத்தையும் செலவழிக்க ஆரம்பித்தாள். அந்த ஸ்தாபனத்தின் அபிவிருத்திக்கென்று எத்தனையோ திட்டங்களைப் போட்டுக் கொண்டு, மேலும் மேலும் நிதி திரட்ட ஆரம்பித்தாள்.

'நிதி' என்றால் அவ்வளவு சுலபமாகவா சேர்த்துவிட முடிகிறது? அதற்காக அவள் எத்தனையோ பேரைப் பார்க்க வேண்டி யிருந்தது; பேச வேண்டி யிருந்தது; அலைய வேண்டி யிருந்தது; அளவ



மனைவி:—இன்னும் ஏன் தூங்காமல் இருக்கிறீர்?

புருஷன்:—படுக்கை சொம்பப் பழசாய்ப் போயிடுத்தோ இல்லையோ, உறுத்தறது! தூக்கமே பிடிக்கவில்லை!




மனைவி:—இன்றைக்குத்தான் புது மெத்தை வாங்கிப் போட்டுக் கொண்டு விட்டீர்களே, ஏன் இன்னும் தூங்கவில்லை?

புருஷன்:—இந்த மெத்தைக்கு இவ்வளவு பணம் செலவழித்து விட்டோமே என்பதை நினைத்தால் எங்கே தூக்கம் வருகிறது?

ளாவ வேண்டி யிருந்தது; பணக்காரர் களுடன் பத்திரிகைக்காரர்களின் தயவை யும் அவள் நாடவேண்டி யிருந்தது. ஆனாலும் அவள் தன் முயற்சியில் தோல்வி யடையவில்லை.

'எடுத்த காரியம் யாவினும் வெற்றி' யடைந்து வந்த ஜகதாவிடம் அவளுடைய தோழிகளுக்கு வரவர அசூயை அதிகமா யிற்று. வாய்க்கு வந்தபடி வம்பளக்க ஆரம்பித்து விட்டனர்.

"இவளால் தேசம் விடுதலை யடையப் போகிறதோ இல்லையோ, முதலில் இவளுக்கு விடுதலை கிடைத்துவிட்டது!" என்றாள் ஒருத்தி.

"ஆமாம், இப்படி இருப்பதில் எவ்வளவு சௌகரியம் இருக்கிறது, பாருங்கள்!— கண்டவர்களிட மெல்லாம் அளவளாவ முடிகிறது; கல்யாணம் செய்து கொண் டால் கட்டிக் கொண்டவனிடம் மட்டுந் தானே அளவளாவ முடியும்?" என்றாள் இன்னொருத்தி.

இதையெல்லாம் போகிற போக்கில் கேட்கக் கேட்க ஜகதாவின் உள்ளம் குமுற ஆரம்பித்துவிட்டது. அப்பா சொன் னதை நினைத்து நினைத்து அவள் அறிவு பெற ஆரம்பித்தாள். ஊராரின் வாயை அடைத்து, தான் அமைதியுடன் வாழ வேண்டுமானால் கல்யாணம் செய்து கொள் வதைத் தவிர வேறு வழி எதுவும் இருப்ப தாகத் தெரியவில்லை அவளுக்கு.

அதற்கேற்றாற்போல் அன்று மாலை அவளுடைய அப்பா, "அம்மா! கடைசி கடைசியாக ஒரு ஜாதகம் வந்திருக்கிறது. பிள்ளையாண்டான் பம்பாய் 'இண்டி பெண்டெண்ட்' பத்திரிகாலயத்தில் துணை யாசிரியனாக இருக்கிறானாம். உன்னைப் போல் அவனுக்கும் பொதுஜன சேவை, தேச விடுதலை இயக்கத்தில் 'பைத்தியம்' இருக்கும் என்று நினைக்கிறேன். எம். ஏ. வரை படித்திருக்கிறான். மாதம் மூன்னூறு ரூபாய் சம்பாதிக்கிறான். அவன் தகப்பனார் போட்டோகூட அனுப்பி யிருக்கிறார்!" என்று ஜகதாவிடம் படத்தைக் கொடுத்து விட்டு, என்ன சொல்லப் போகிறாளோ என்ற பீதியுடன் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்.

ஜகதா அந்தப் படத்தை வாங்கி அலட் சியமாகப் பார்த்து விட்டு, "உடனே முடித்து விடுங்கள், அப்பா! இதுவரை நான் நித்திய கன்னிகையாக இருந்தது போதும்!" என்று சொல்லிவிட்டு, நேரே தன் அறைக்குப் போய்க் கட்டிலில் குப்புறப் படுத்துக் கொண்டாள்.

அடுத்த நிமிஷம் அவள் விம்மி யழும் சத்தம் ஹாலில் உட்கார்ந்திருந்த விசுவ நாதய்யரின் காதில் விழுந்தது.

## காலக்ஷேபம்

### வாஸ்தவம்!

நண்பன்:—நீ இந்தமாதிரி குடித்துக் குடித் துக் கெட்டுப் போகாமல் இருந்தால் இந்நேரம் நான் முதலாளி உன்னை மேஸ்திரியாக்கி யிருப்பாரே!

குடிகாரன்:—அது சரிதான், அப்பா! நான் குடித்து விட்டேனானால், எனக்கு நானே முதலாளி மாதிரியல்ல தோணுது!



### நல்ல யோசனை!

குடியானவன்:—நம்ம காளை மாடு சில சமயம் நல்லா இருக்காப்போலே யிருக் குதுங்க......... சில சமயம் நொண்டுதுங்க. அதுக்கு என்ன செய்யணுமுங்க?

கால்நடை வைத்தியர்:—அடுத்த தடவை அது நல்லபடியாக இருக்கிற சமயமாய்ப் பார்த்து அதை யாருக்காவது விற்று விடு, அப்பா!

### வர முடியுமா?

ராமு:—கிட்டு! வருகிறாயா, அந்தத் தெருக் கோடிக்குப் போய் விளையாடலாம்?

கிட்டு:—ஐயையோ! நான் அங்கே யெல் லாம் வரமாட்டேன். எங்க அப்பா வந்து விடுவார். மணி ஐந்தரையாகி விட்டது.

ராமு:—உங்க அப்பா இப்பொழுது எங்கே வரப்போகிறார்? அவர் பள்ளிகூடத்தானே வாணும்?



### அவனுக்கு ஒன்றுமில்லை!

அம்மு:—என்னைச் சமைக்க வேண்டா மென்று டாக்டர் சொல்லி விட்டார்!

மீரு:—ஏன்? உனக்கு உடம்பு சரியா யில்லையா? அதற்காகத்தான் அடுப்பண்டை போகக் கூடாது என்கிறாரா, டாக்டர்?

அம்மு:—அதெல்லாம் ஒன்றுமில்லை, என் அகத்துக்காரருக்குத்தான் வயிற்று வலி!

# தேற்றுவார் யார்?

## விந்தன்

"பணத்தை வீணாக்காதீர்கள்! யுத்த காலக் கடன் பத்திரங்களை வாங்கி, பத்து ரூபாய்க்குப் பதினைந்து ரூபாயாகப் பத்து வருடங்களுக்குப் பிறகு பெற்றுக் கொள்ளுங்கள்!" என்னும் சர்க்கார் விளம்பரத்தைப் படிக்கும் போதெல்லாம் எங்கள் ஊர் உத்தமராத ராயுடுகாருவுக்குச் சிரிப்புச் சிரிப்பாய் வரும். "ஆஹா! எமி தயாளச் சித்த! எந்த பரோபகாரமு!" என்று தமக்குள் எண்ணிக் கொள்வார்.

பத்து ரூபாய்க்குப் பத்து வருஷங்களில் அறுநூறு ரூபாய் வட்டி வாங்கும் அவருக்கு, சர்க்கார் கொடுக்கும் ஐந்து ரூபாய் வட்டியை நினைத்தால் சிரிக்காம லிருக்க முடியுமா?

உலகத்துக்கெல்லாம் ஒரு காலண்டர் என்றால், எங்கள் ஊர் உத்தமராத ராயுடுகாருவுக்கு மட்டும் தனிக் காலண்டர்!— அவருடைய காலண்டரில் வருஷம் பன்னிரண்டு மாதமும் முப்பத்திரண்டு நாட்கள் தான்! கூடுதலோ குறைச்சலோ ஒன்றும் இடையிலே கிடையாது!

பொழுது விடிந்தால் இந்த அங்காடிக் கடைக்காரர்கள் இருக்கிறார்களே, அவர்கள் வந்து ராயுடுகாருவின் வீட்டை வெல்லத்தில் ஈ மொய்ப்பதுபோல் மொய்த்துக் கொள்ளுவார்கள். அன்றைக்குத் தாங்கள் செய்யப் போகும் வியாபாரத்துக்கு முதலாக அவரிடமிருந்து ஆளுக்கு ஐந்து, பத்து என்று வாங்கிக் கொண்டு போவார்கள். சாயந்திரமானால் ஐந்து ரூபாய் வாங்கிக் கொண்டுபோனவர்கள், ரூபாய்க்குக் காலணா வீதம் ஒன்றே காலணா வட்டியும், அசலில் இரண்டரை அணுவுமாகச் சேர்த்து மூன்றே முக்காலணா கொண்டு வந்து கொடுத்துவிட வேண்டும். பத்து ரூபாய் வாங்கியவர்கள் வட்டி இரண்டரை அணுவும் அசலில் ஐந்தணுவுமாகச் சேர்த்து ஏழரை அணு கொண்டு வந்து கொடுத்துவிட வேண்டும். முப்பத்திரண்டு நாட்கள் இவ்வாறு கொடுத்து வாங்கிய கடனை அடைத்த பிறகு, மீண்டும் வந்து வழக்கம்போல் தங்களுக்கு வேண்டியதை வாங்கிக் கொண்டு போகலாம். தினசரி தங்கள் வியாபாரத்தில் அவர்களுக்கு லாபம் வந்தாலும் சரி, வராமற் போனாலும் சரி— மேற்கூறிய சட்ட திட்டங்களை ஒரு வரும்— ஒரு நாளும் மீறவே கூடாது. தவறினால் தலை போனாலும் பாவா யில்லையே—'கவலை விட்டது!' என்று அந்த அங்காடிக் கடைக்காரர்கள் நினைத்துக் கொள்வதற்குக் கூட வழி யில்லாமல் தரித்திரம் அவர்களை விட்டுத் தொலைந்து விடும்!— பிழைப்பே போய் விட்டால்...? பிச்சை எடுப்பதைத் தவிர வேறு வழி?




★

அந்த அம்மாசி வழக்கத்துக்கு விரோதமாகக் கொஞ்சம் நேரம் கழித்து வந்தான். எப்பொழுது போனாலும் 'தர்ம ராஜா' இல்லை என்று சொல்ல மாட்டார் என்ற நம்பிக்கை அவனுக்கு!— ஆமாம், ராயுடுகாருவினிடம் கடன் வாங்கும் அங்காடிக் கடைக்காரர்கள் அத்தனை பேரும் அவரை 'தர்ம ராஜா' என்றுதான் மனமார வாயார வாழ்த்தி வந்தனர்!

'தர்ம ராஜா' என்பதற்காக எவ்வளவு நேரம் கழித்து வந்தாலும் ராயுடுகாரு சும்மா இருக்க முடியுமா, என்ன? சரக்கு மோசமா யிருந்தாலும் செட்டியார் மிடுக்காக இருக்க வேண்டாமா? ஆகவே, "ஏன் இவ்வளவு

நேரம்? நீ வரவில்லை என்பதற்காக நான் காத்துக் கொண்டு நிற்க வேண்டுமோ?" என்று அம்மாயியைக் கொஞ்சம் அதட்டிக் கேட்டார்.

"பக்கத்து வீட்டுக்காரம்மா எங்கேயோ போயிருக்தாங்க, சாமி! அவங்க வந்ததும் என் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டுவிட்டு வரலாம்னு காத்துக் கிட்டு இருந்தேன். அதனாலே கொஞ்சம் நேர மாயிடுச்சி!" என்றாள் அம்மாயி கையைப் பிசைந்து கொண்டே.

"உன் குழந்தைகளை யாராவது பார்த்துக் கொள்ளாவிட்டால் அவர்களைப் பருந்து வந்து தூக்கிக் கொண்டு போய்விடுமாக்கும்! இவ்வளவு நேரம் கழித்து வந்திருக் கிறாயே, இனிமேல் நீ என்னத்தை வாங்கி விற்று எப்பொழுது 'தண்டல்' கொண்டு வந்து கட்டுவது? — உங்கள் பேரில் குற்றம் சொல்லிப் பிரயோசனம் இல்லை; என்னைச் சொல்ல வேண்டும். கடனுக்கு கர்வமா, இது? போனால் போகிற தென்று புண்ணியத் துக்கு என் வீட்டுப் பணத்தைக் கொடுத் தால், அதை சேர்த் தோடு வந்தாவது வாங் கிக் கொண்டு போகக் கூடாதோ?"

"அட! நீங்கள் பணம் கொடுப்பதில் புண்ணி யம் வேறு இருக்கிறதா!" என்று அம்மாயி கொஞ்சமாவது ஆச்சரியப்பட வேண்டுமே? இல்லவே இல்லை. அதற்குப் பதிலாக, "நான் எம்மா நேரம் கழிச்சு வந்தா உங்க ளுக்கு என்ன, சாமி? எப்படியாச்சும் சாயங் திரம் உங்களுக்குத் 'தண்டல்' வந்து சேர வேண்டியதுதானே?" என்றாள்.

"என்ன, ஒரு சொல்லு சொன்னா ஒரே யடியா இப்படிக் கோவிச்சுக்கிறயே? யாருக்காக நீ சாயந்திரத்துக்குள்ளே 'தண்டல்' கட்டப் போறே? உன் அப்ப னுக்கு அழுதுகொண்டு கட்ட வேணும்?"

அம்மாயிக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. "என்னை இன்னொரு தரம் இப்படி யெல்லாம் சொல்லாதீங்க, சாமி! உங்கக் கிட்ட நான் ஒரு அஞ்சு ரூவா கடன் வாங்கறதுக்காவ நீங்க வேறே எனக்கு அப்பாவா இருக்க வேண்டிய தில்லே!" என்றாள் அழுகையும் ஆத்திர மும் கலந்த குரலில்.

சாயுடுகாருவுக்குச் 'சுருக்'கென்றது. ஆனாலும் அதை அவர் வெளியே காட்டிக்



கொள்ளவில்லை. இந்தச் சின்ன விஷயத் துக்காக அவர் ஒரு வாடிக்கைக்காரியை இழந்துவிட முடியுமா? ஆகவே மெதுக்குச் சிரித்துக் கொண்டே, "அதற்குச் சொல்ல வில்லை, அம்மாயி! சும்மா நீ எப்படி இருக் கிறே என்று பார்த்தேன்! அடே யப்பா! நீ இவ்வளவு ரோஷக்காரி என்று எனக்கு இப்போதுதான் தெரிந்தது!" என்று சொல்லிக் கொண்டே ஐந்து ரூபாயை எடுத்து அவளிடம் கொடுத்தார்.

அதை அடக்க ஒடுக்கத்துடன் வாங்கி முந்தானையில் முடிந்து கொண்டு, "நான்

"போய்விட்டு வரேன், சாமி!" என்று அம்மாயி தலைகுனிந்த வண்ணம் போய் விட்டாள்.

★

அன்று வடக்குத் தெருவிலிருந்த எல்லாக் கடைகளிலும் ஒரே மாம்பழக் குவியலாயிருந்தது. என்னதான் பழங்கள் வந்து குவிந்திருந்தாலும் விலை என்னமோ ஏகக் கிராக்கிதான். நல்ல பழங்கள் நூறு பத்து ரூபாய்க்குக் குறையவில்லை. கொஞ்சம் வெம்பியும் அழுகியும் இருந்த பழங்கள் நூறு ஐந்து ரூபாய்க்குக் கிடைத்தன.



"என்னத்தை வாங்கி விற்றால் எவ்வளவு லாபம் கிடைக்கும்?" என்ற சிந்தனையில் அம்மாயி நெடுநேரமாக ஈடுபட்டிருந்தாள். கடைசியாக, நூறு ஐந்து ரூபாய்க்கு விற்கும் அந்த அழுகல் மாம்பழங்களின் மேல்தான் அவள் கவனம் சென்றது. அவள் கைவசம் அப்போது இருந்ததும் ஐந்து ரூபாய்தானே? ஆகவே அதற்கு மேல் அவளுடைய யோசனை ஓடவில்லை.

அந்தப் பழத்தை வாங்கி ஒன்று ஓரணா என்று விற்றாலும் ஒன்றேகால் ரூபாய் லாபம் கிடைக்கும். "அங்கே நிற்காதே, இங்கே உட்காராதே!" என்று அடிக்கடி வந்து மிரட்டும் போலீஸ்காரர்களுக்கு நாலணா 'தண்டக் காசு' அழுதாலுங்கூட ஒரு ரூபாய் கட்டாயம் மிஞ்சும். ஊரில் சிலர், தங்கள் குழந்தைகளுக்குப் பழம் வாங்கிக் கொடுத்தாலும் கொடுத்து விடுகிறார்கள், அதைப் பார்த்துவிட்டு நம் குழந்தைகளும் தங்களுக்குப் பழம் வாங்கித் தரவேண்டும் என்று இரண்டு மூன்று நாளாய் ஒற்றைக் காலால் நின்று தொலைகின்றன! நம்முடைய நிலைமை அந்தக் குழந்தைகளுக்குத் தெரிகிறதா, என்ன? நாமும் எத்தனை நாளைக்குத்தான் அவற்றை ஏமாற்றிக் கொண்டு வருவது? இன்றைக்கு எப்படியாவது இரண்டணா கொடுத்து இரண்டு பழம் வாங்கிக் கொண்டு போய்க் குழந்தைகளிடம் கொடுத்துவிட வேண்டும். அப்புறம் பதினாலணா மீதி இருக்கும். அந்த 'தர்மராஜா' நாயுடுவுக்கு அசலில் இரண்டரையணாவும் வட்டி ஒன்றே காலணாவுமாகச் சேர்த்து மூன்றே முக்காலணா கொடுத்து விட்டால் பத்தேகாலணாதான் கடைசியில் மிச்சமாகும். அதிலும் வெற்றிலை, பாக்கு, புகையிலைக்கு ஓரணா போனால் பாக்கி ஒன்பதே காலணா தான்! — இவ்வளவு போதாதா, ராத்திரி சாப்



பாட்டுக்கு? — இப்படியெல்லாம் என்னவெல்லாமோ எண்ணித் தனக்குள் சமாதானம் செய்து கொண்டே அருகிலிருந்த ஒரு கடைக்காரனிடம் ஐந்து ரூபாய் நோட்டை நீட்டி, "ஐயா! இந்தப் பழத்தில் எனக்கு ஐந்து போடு!" என்று சொல்லிக் கொண்டே கையோடு கொண்டு வந்திருந்த கூடையைக் கீழே வைத்தான்.

உடனே அவன் கைக்கு ஐந்து பழங்களாக எடுத்து, "ஒன்னு, ஒன்னு, ஒன்னு!... ரெண்டு, ரெண்டு, ரெண்டு!" என்று ஏதோ ஒரு தினுசாக ராகம் இழுத்துப் பாடிய வண்ணம் எண்ணிப் போட்டான். பதினெட்டாவது 'கை' போடும்போதே, தினசரி எத்தனையோ பேரை ஏமாற்றி ஏமாற்றிப் பழகி போன அவனுடைய வாய், "இருபது, இருபது, இருபது...!" என்று 'மங்களம்' பாடி முடித்து விட்டது!

பாவம், தான் போட்ட லாபக் கணக்கில் அந்தக் கடைக்காரனின் கைங்கரியத்தால் பத்தணா குறைந்து போனதை அவன் அறியவில்லை; துஷ்ட சிக்ஷை சிஷ்ட பரிபாலனம் செய்யும் பகவானும் பிரசன்னமாகி அவனுக்கு நீதி வழங்கவில்லை!

★

"மாம்பழம், மாம்பழம்!" என்று கூவிக் கொண்டே தெருத் தெருவாக நடந்தான் அம்மாயி.

பங்களாக்கார வழி நடைப் பாதையில் காத்திருந்த ஒருத்தி, "ஏ, மாம்பழம்!" என்று அவனைக் கூப்பிட்டாள்.

"ஏம்மா!" என்று பதிலுக்குக் குரல் கொடுத்துக் கொண்டே வந்து, தலைமேலிருந்த கூடையை இறக்கிக் கீழே வைத்தான் அம்மாயி.

"டஜன் என்ன விலை?"

"ஒரே விலை சொல்லவா, இல்லே — இரண்டு விலை சொல்லவா?"

"ஒரே விலைதான் சொல்லு!"

"வேறே விலை கேட்கமாட்டீங்களே?"

"கேட்க மாட்டேன்!"

"டஜன் பன்னிரண்டணா!" என்று சொல்லிவிட்டு, மனைவியை அடகு வைத்துக் காலகண்டய்யரின் கடனை அடைத்து விட்ட அரிச்சந்திரனைப் போல அம்மாயி சந்தோஷமடைந்தான்.

இந்த உண்மை அந்த அம்மாளுக்குத் தெரியவில்லை. அவள் அலட்சியமாகத் தன் வாக்குறுதியை மீறி, "டஜன் ஆறணாவுக்குக் கொடுக்க மாட்டாயா?" என்று கேட்டாள்.

"என்ன, அம்மா! வேறே விலை கேட்க மாட்டேன்னு சொல்லிவிட்டு இப்படிக் கேட்கிறீங்களே?" என்று சொல்லிவிட்டு, அம்மாயி கூடையைத் தூக்கி மீண்டும் தலையில் வைத்துக் கொண்டான்.

"முதல் முதல்லே 'போனி' பண்ணு வாங்கன்னு பார்த்தா, அந்த அம்மா இப்படிக் கேட்டுவிட்டாங்களே! அதுக்காக நஷ்டத்துக்குப் போம் பண்ண முடியுமா?" என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான் அம்மாயி.

மீண்டும் இன்னொரு இடத்திலிருந்து அழைப்பு! — போனான்.

"டஜன் என்ன விலை?"

இந்தத் தடவை அவன் அரிச்சந்திரனைப் பின்பற்ற விரும்பவில்லை. "ஒன்னரை ரூபாயுங்க!" என்றான்.

"முக்கால் ரூபாய் கொடுப்பாயா?" என்று கொஞ்சம் கூடக் கூசாமல் கேட்டார் அந்த ஆசாமி.

"சரி, எடுக்கோ! முதல் முதல்லே போனி பண்ணுங்கோ!" என்றான் அம்மாயி.

அந்த மனிதர் கால் டஜன் பழங்களை எடுத்துக் கொண்டு மூன்றணாவை எடுத்து அவனிடம் கொடுத்தார். அதைப் பெற்றுக் கொண்டு திரும்பியபோது, அவனுக்கு எதிரே ஒரு பலூன்காரன் வந்தான். "அப்புறம் மறந்து விட்டாலும் மறந்து விடுவோம். குழந்தைகள் ஏமாந்து போகும்!" என்று எண்ணி, அவனிடம் இரண்டணாவைக் கொடுத்து இரண்டு பலூன்களை வாங்கி வைத்துக் கொண்டான்.

சிறிது நேரம் சென்ற பிறகு, அவனுக்கு வயிற்றைக் கிள்ளியது. அதற்கு ஏற்ற மாற்று வெற்றிலை போட்டுக் கொண்டு, வாயில் புகையிலையை அடக்கிக் கொள்வது என்பதுதான் அவன் வாழ்க்கையில் கண்டறிந்த அனுபவ உண்மையாயிற்றே! அருகிலிருந்த கடையில் ஓரணாவுக்கு வெற்றிலை, பாக்கு, புகையிலை வாங்கிக் கொஞ்சம் போட்டுக்கொண்டு, மீதியை மடியில் கட்டி வைத்துக் கொண்டு நடந்தான்.

★

ஊரில் அப்பொழுது காலரா என்பதற்காக, சுகாதார அதிகாரிகள் வேறொன்றும் செய்யா விட்டாலும் ஊரைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தனர். அன்று காலை தெற்குத் தெருவில் அவர்களுடைய நடமாட்டம் அதிகமாயிருந்தது. "எங்கே

அழுகல் பழங்களோடு நல்ல பழங்களையும் சேர்த்து வாரி வாரியில் கொட்டிக் கொண்டு போய் விடுவார்களோ?" என்று எல்லாக் கடைக்காரர்களும் அவர்களைப் பீதியுடன் பார்த்துக் கொண்டிருந்தனர்.

அவர்களில் யாராவது ஒருவர் தன் கடைக்கு அருகே வந்து விட்டால் போதும், உடனே அந்தக் கடைக்காரன் அவரைக் கடைக் கண்ணால் பார்த்துக்கொண்டே, "அடேய், பையா! 'ஐயா'வின் வீடு உனக்குத் தெரியுமோ, இல்லையோ? நல்ல பழங்களாக ஒரு டஜன் பொறுக்கி எடுத்துக் கொண்டு போய் 'அம்மா'கிட்ட கொடுத்து விட்டு வாடா!" என்பான். 'ஐயா'வும் அதைக் கவனிக்காதவர் போல் அப்பால் போய்விடுவார்!

இந்த அற்புதமான காட்சி ஏனோ நினைவு சென்று அம்மாயியின் மனக் கண் முன்னால் தோன்றிற்று! "ஐயோ! அந்தப் புண்ணியவான்கள் கண்ணில் படாமல் இருக்க வேண்டுமே!" என்ற கவலை அவளைப் பிடித்தது. முன்னும் பின்னும் பார்த்துக் கொண்டே பரபரப்புடன் நடந்தாள்.

இவ்வாறு எண்ணி அவள் இரண்டடிகூட எடுத்து வைத்திருக்க மாட்டாள். "ஏய்! கூடையில் என்னும்மே?" என்று யாரோ அதிகார தோரணையில் கேட்பதுபோலிருந்தது. அம்மாயி திரும்பிப் பார்த்தாள். 'கிரீச்'சென்று நின்ற லாரியிலிருந்து யாரோ ஒருவர் இறங்கிக் கொண்டிருந்தார்.

அவர் சுகாதார அதிகாரி என்பதை அறிந்து கொண்ட அவள் கதிகலங்கிப் போய் விட்டாள். "சாமி, சாமி! ஏழையை ஒண்ணும் செய்யாதீங்க, சாமி!" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டே கூடையை இறக்கிக் கீழே வைத்து விட்டு, அந்த அதிகாரியின் காலைப் பிடித்துக் கொண்டாள்.

அதிகாரி ஓர் அலட்சியப் புன்னகை புரிந்து விட்டு, "உன்னைத்தானே ஒன்றும் செய்யவேண்டாம் என்கிறாய்? சரி, போ! —டேய்! யாரடா, அங்கே?—உம்......!" என்று உறுமினர்.

அடுத்த கிமிஷம் அவர் அருகிலேயே நின்று கொண்டிருந்த ஒரு சுகா சுத்தித் தொழிலாளி, அம்மாயியின் கூடையைப் பருந்துபோல் பாய்ந்து தூக்கினான்.

"ஐயையோ!" என்று அலறினாள் அவள்.

அதை அவன் லட்சியம் செய்யவில்லை. பழங்களை லாரியில் கொட்டிக் கொண்டு, கூடையை அவளுக்கு முன்னால் வீசி எறிந்துவிட்டு வண்டியில் ஏறிக் கொண்டான். சுகாதார அதிகாரியும் அவனுடன் ஏறிக்கொண்டார். அவருடைய முகத்தில் அலாதி களை வீசிற்று. "அம்மாயியின் கூடையைக் காலி செய்ததின் மூலம் காலராவை அடியோடி ஒழித்துவிட்டோம்!" என்ற திருப்தியோ, என்னமோ!

மறுகணம் அம்மாயியின் கண்களில் மண்ணை வாரிப் போட்டுக்கொண்டே லாரி 'விர்'ரென்று கிளம்பி விட்டது.

"அட, பாவிகளா! சாயந்திரம் அந்த நாயுடுவுக்கு நான் என்ன பதில் சொல்வேன்? குழந்தை குட்டிக்கு எப்படிக் கஞ்சி காய்ச்சி வார்ப்பேன்?" என்று கண்ணீரும் கம்பலையுமுடன் கதறிக் கொண்டே, கீழே விழுந்து புரண்டாள் அவள்.

தன்னை மறந்த துக்கத்தில், தன் கையிலிருந்த இரண்டு பெறுன்களும் விடுதலையடைந்து வான வீதியை நோக்கிப் பறந்ததைக்கூட அவள் கவனிக்கவில்லை; தானும் தன்னுடைய குழந்தைகளும் இரவு பட்டினி கிடக்க வேண்டுமே என்று கூட அவள் அவ்வளவாகக் கவலை யடையவில்லை; 'தர்ம ராஜா நாயுடுகாரு'வுக்கு என்ன பதில் சொல்லுவது என்று எண்ணி எண்ணித்தான் ஓயாமல் அழுது கொண்டேயிருந்தாள்.

பாவம், கதியற்ற அவளுக்கு விதியைத் தவிர வேறு எதாவது ஆறுதல் சொல்லித் தேற்றுவார் யார்?



வேலைக்காரன்:—யாரோ ஒருத்தர் வந்திருக்கிறாருங்க; அவர் பாலிலிருந்தே வெண்ணெய் எடுத்து விடுவாராம்!

எஜமானர்:—போடா, முட்டாள்! அது என்னடா அதிசயம்?

வேலைக்காரன்:—அது மட்டும் இல்லீங்க, எஜமான்! நம்ப கோனார் ஊற்றுகிற பாலிலே யிருந்து கூட அவர் வெண்ணெய் எடுத்து விடுவாராமே!

—கே. எஸ். ராமநாதன்.

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 169. ஆயிரம் இல்லையே, கண் !

சூர்ப்பனகை ராவணனிடம் வந்து சீதையின் அழகைப் பற்றி வர்ணித்தாள். அவ்வளவுதான்; வர்ணித்ததிலிருந்தே அவனுக்கு ஆசைப் பைத்தியம் உண்டாய் விட்டது என்பதைப் பார்த்தோம்.

அந்த ஆசைப் பைத்தியத்தில் கரன் முதலியவர்கள் பட்டொழிந்தார்கள் என்பதை ராவணன் மறந்துவிட்டான்; தங்கையின் மூக்கை அறுத்தவனும் ஒருவன் இருக்கிறானே என்பதை மறந்துவிட்டான்; அவமானத்தை மறந்துவிட்டான். அயலான் பெண்ணைச் சம்மதம் இல்லாமல் தொடுவது போன்ற கேடு வேறொன்றுமில்லை என்ற கடவுள் ஆக்ஞையை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருந்தவன் தான். அந்த உறுதியையும் மறந்துவிட்டான். ஆனால் ஒன்றை மறக்க முடியவில்லை; சீதையை — சூர்ப்பனகையால் வர்ணிக்கப்பட்ட சீதையைத் தான் — மறக்க முடியவில்லை.

அந்தச் சீதையை இப்போது கண்ணாலேயே நேருக்கு நேராகவே காண்கிறான்.

எண்ணி எண்ணி மனக் கண்ணால் பார்த்த அழகெல்லாம் ஒன்றும் இல்லை. நேரில் பார்க்கிற அழகு அவ்வளவு மேலாய் எங்கும் காண முடியாததாய் இருக்கிறது.

எதிர் பாராதபடி திடீர் என்று கண் முன் பார்க்கவும் வெலவெலத்துப் போய் விடுகிறான் ராவணன்.

அவனுடைய தேகம் முழுவதும் ஒரே வேர்வையாய்ச் சொட்டுகிறது. ஆசையோ ஒரே பேராசைக் கடலாகக் கொந்தளிக்கிறது. அந்தக் கடலிலிருந்து காதல் எண்ணங்கள் அலை அலையாகப் புறப்பட்டு வருகின்றன.

இனி பாட்டைப் பார்க்கலாம் :

**வெற்பிடை மதம்என**
**வியர்க்கும் மேனியன்**

**அற்பினத் திரைபுரள்**
**ஆசை வேலையன், —**

**பொற்பினுக்(கு) அணியினைப்**
**புகழின் சேக்கையைக்**

**கற்பினுக்(கு) அரசியைக்**
**கண்ணின் நோக்கினன்**

[அற்பு இனத் திரை புரள் : காதலாகிய கூட்டமான அலைகள் ஒன்றன் பின் ஒன்றாக வந்து புரளும்; பொற்பினுக்கு அணியினை : அழகுத் தெய்வம் தனக்கு அலங்காரமாக அணிந்து கொள்ளக் கூடிய சீதையை : புகழின் சேக்கையை : பெண் தன்மையைப் புகழ்கிறதென்றால் சீதையைத் தான் புகழ வேண்டும். அந்தப் புகழுக்கு யாதொரு பழுதும் ஏற்படாது. ஆம், கவலை யில்லாமல் புகழ் அவளிடம் பொருந்தி யிருக்கலாம் : சேக்கை : படுக்கை.]

குயில் போன்ற சீதையின் சொல் அவன் காதில் விழுந்தது முதலில்; பிறகு, எங்குமில்லாத அவளது அழகு அவன் கண்ணுக்குத் தென்பட்டது. காமுகனாய் நின்ற ராவணனுடைய மன நிலையைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?

தூங்களின் குயில்கெழு
சொல்லின், உம்பரும்

ஓங்கிய அழகினன்
உருவங் காண்டலும்,

ஏங்கினன் மனநிலை
யாதென்(று) உன்னுவாம் ;—

வீங்கின மெலிந்தன
வீரத் தோள்களே!

[தூங்களின் குயில் கெழு : ஸ்வரம் மேலும் கீழும் ஏறி இறங்குகிற குயிலை ஒத்தும் பேசும்; உம்பரும் ஓங்கிய அழகினள் : தேவலோகத் திலும் ஒப்பற்று உயர்ந்தது என்று சொல்லும் படியான அழகிய சீதையின் ; ஏங்கினன் : ஒரே ஏக்கம் கொண்டவனான ராவணனது : மன நிலை யாதென்று உன்னுவாம் : மன நிலை இப்படி என்று எடுத்துச் சொல்ல முடியாது, நினைக்கவே முடியாது. ஆனால் அவனுடைய தோள்களின் மூலம் தெரியவருகிறது. மலை போல் பருத்திருந்த தோள்கள் அப்படியே மெலிந்து விட்டன!]

தனக்குள்ளேயே சொல்லிக் கொள்ளுகிறான் ராவணன் : "தாமரை மலரை விட்டு லக்ஷ்மி இங்கே வந்த மாதிரி யிருக்கிறது — இவளுடைய அழகைப் பார்த்தால்."

'செயிதழ்த் தாமரைச்
சேக்கை நீர்ந்(து)இவண்

மேயவள் மணிநிற
மேனி காணுதற்(கு)

ஏயுமே இருப(து)இங்(கு)
இமைப்பில் நாட்டங்கள் !—

ஆயிரம் இல்லை' என்று
அல்லல் எய்தினன்.

[செயிதழ்த் தாமரைச் சேக்கை நீர்ந்து : செந்தாமரையில் தங்குவதை விட்டு விட்டு : இவண் மேயவள் ; இங்கே வந்துள்ள இவளது : மணி நிற மேனி காணுதற்கு : பவள மேனியைக் கண்டு களிப்பதற்கு : ஏயுமே : போதுமோ ; இருபது இமைப்பில் நாட்டங்கள் : இமை கொட்டாத ஏதோ இருபது கண்கள் போதுமோ ! ஆயிரம் இல்லை : அடடா, நமக்கு ஆயிரம் கண்கள் இல்லையே என்று : அல்லல் எய்தினன் : வருந்தினன்.]

"அழகுதான் எப்படி யிருக்கிறது! பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத அழகல்லவா இது!" என்கிற உணர்ச்சியின் வேகம் ஆயிரம் இல்லை என்ற ஏக்கத்தோடு கூடிய தொனியில் நிற்பதைப் பார்க்கலாம்.

"ஆயிரம்" என்ற வார்த்தை எதுகையில் வந்து அழகாய் ஒலிக்கிறது.



# இரு நண்பர்கள்

ஆசிரியர் : சுதர்சன் மொழிபெயர்ப்பு : ரா. வீழிநாதன்

**ரூபராணி சொல்லுகிறாள் :**

## 11. வித்யாகுமாரி

எனக்கோ கல்யாணம் ஆகிவிட்டது. ஆனால் மனதுக்குத்தான் நிம்மதி என்பதே இல்லை. 'அவர்' என்னை உயிருக்கு உயிராகத்தான் நேசித்து வந்தார்; கண்ணும் கருத்துமாகத்தான் பாதுகாத்து வந்தார்; என்னைக் கேளாமல் அவர் எந்தக் காரியமும் செய்வதில்லை. இந்த வீட்டுக்கு வந்த பிறகு எனக்கு எதற்குமே குறைவில்லை. நான் வாய் திறந்து கேட்டு, ஒரு அன்று 'இல்லை' என்றுசொல்லி இன்றுவரை நான் அறியேன். மாமியார், மாமனாரும் என்னை வெகு பட்சமாகவே கவனித்து வந்தனர். என்னை சாக்ஷாத் லக்ஷ்மி என்றே சொல்லிக் கொண்டாடினர். அரண்மனைகளில் சுக வாழ்வு வாழும் ராணிகளுக்குக் கூட, எனக்குக் கிட்டியிருக்கும் சுகம் கிட்டியிராது என்றே எனக்குப் படுகிறது. அவர் ஒரு மோட்டார் கம்பெனி ஆரம்பித்து நடத்தி வந்தார். அதில் ஆயிரக்கணக்காக லாபம் கிடைத்து வந்தது. ஆனால் இவ்வளவு இருந்தும் எனக்கு ஏனோ மன நிம்மதியென்பதே இல்லை. இடையிடையே வித்யாசங்கரின் நினைவு எழுந்து, என் மனத்தை வருத்தி வந்தது. அவர் எங்கே இருக்கிறாரோ? எப்படி இருக்கிறாரோ? என்ன செய்துகொண்டிருக்கிறாரோ? யார் கண்டது? பரீக்ஷை முடிவு தெரிந்த பிறகு அவர் யாருக்குமே தன் முகத்தைக் காட்டவில்லை. ஊர் வாய்க்குப் பயந்துதான் அவர் கண் காணாத இடத்துக்கு ஓடிப்போயிருக்கவேண்டும். அவருடைய கிழத் தாயார் அழுத அழுகையைச் சொல்லி முடியாது. தள்ளாத காலத்துக்கு ஊன்றுகோல் என்று எண்ணி வளர்த்த அருமைப் பிள்ளை ஓடிவிட்டால் பெற்ற மனம் வேதனைப்படாமல் என்ன செய்யும்?

'இவர்' அவளுக்குச் செலவுக்காக மாதம் இருபது ரூபாய் கொடுத்து வந்தார். "நண்பனின் தாயாரல்லவா?" என்று என்னிடம் சொல்லுவார். தம் நண்பனின் குணாதிசயங்களைப் பற்றி வாயாரப் புகழ்வார். 'வெகு நாட்களுக்குப் பின்புதான் அவனை என்னால் சரியாகப் புரிந்துகொள்ள முடிந்தது' என்று சொல்லி வருந்துவார். ஒரு நாள், 'அவன் அகப்பட்டுவிட்டால் நம் கம்பெனிக்கு அவனையே மானேஜராக்கி விடுவேன். அவன் ஆயிரம் ரூபாய் கேட்டாலும் கொடுக்கத் தயங்க மாட்டேன். அவன் மனிதனா? தெய்வாம்சம் என்றுதான் சொல்ல வேண்டும். அவன் செத்தாலும் சாவானே தவிர, சொன்ன சொல் ஒரு நாளும் தவற மாட்டான். அவனைப் போன்றவர்கள் இந்த உலகத்தில் கிடைப்பது ஏது?' என்று என்னிடம் சொன்னார். இதைக் கேட்ட என் உள்ளம் பொருமியது. 'என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட வித்யாசங்கர் தான் பரீக்ஷையில் முதலாவதாகத் தேறவில்லையே என்பதற்காக என்னிடம்கூடச் சொல்லிக் கொள்ளாமல் ஓடிவிட்டாரே!' என்று என் மனம் புழுங்கியது. சில சமயம், 'இனி அவர் நம் கண்ணில் படாமலே இருந்தால் சரி; அவரை நேரில் கண்டு விட்டால் மனம் சலனம் அடைந்தாலும் அடைந்து விடும்' என்று எண்ணி மனத்தைத் தேற்றிக் கொள்ளுவேன்.

இப்படியாக அநேக வருஷங்கள் ஓடி மறைந்தன. நானும் ஒரு பெண் குழந்தைக்குத் தாயாரானேன்.

காலை நேரம். அவர் ஒரு மேஜையில் உட்கார்ந்து சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்தார். நான் பெண்ணைத் தூக்கிக் கொண்டு அவரிடம் போய், "ஆமாம், இவளுக்கு ஒரு பெயர் வைக்க வேண்டும் என்று ஞாபகமிருக்கிறதோ, இல்லையோ?" என்று கேட்டேன்.

அவர் ரொட்டித் துண்டைக் கடித்துக் கொண்டே, "நீதான் ஒரு அழகான பெயராக யோசித்து வையேன்!" என்றார்.

"நான் என்ன சொல்லுவது, போங்கள்! நான் சொன்ன பெயரெல்லாம்தான் உங்களுக்குப் பிடிக்கவில்லையே! ...... பிரபா, கமலினி, சாந்தி, புஷ்பா, பிரேமா, குஸுமா, சீதா......"

அவர் தேநீர் அருந்தியவாறு, "இந்தக் கர்நாடகப் பெயர்களெல்லாம் எதற்கு? வேறு ஏதாவது நல்ல பெயராகச் சொல்லேன்!" என்றார்.

நான் குழந்தையின் தலையில் 'மப்ள'ரைச் சுற்றிக் கொண்டே, "இவளுக் கேற்ற பெயர் இந்த உலகத்திலே எனக்குத் தெரிந்த வரையில் இல்லை. நீங்கள்தான் உங்கள் பெண்ணுக்குப் பெயர் வைக்க வேண்டும்!" என்று சொன்னேன்.

பிறகு, குழந்தையின் மாம்பழக் கதுப்புகளைக் கையால் தடவியவாறு, "என்னடி, பூனைக்குட்டி மாதிரி 'உர்' என்று விழிக்கிறாய்? 'மியாவ்' என்று உனக்குப் பெயர் வைத்து விட்டால் என்ன?" என்று சிரித்துக் கொண்டே சொன்னேன்.

சிற்றுண்டியை முடித்துக் கொண்டு எழுந்த அவர், கண்ணாடிக்கு எதிரில் போய் நின்று 'டை' கட்டிக் கொள்ள ஆரம்பித்தார்.

"ஆமாம், நல்ல பெயராக வை என்று சொன்னால் நீ ஆட்டுக் குட்டி, பூனைக் குட்டி என்று அசடு வழிய ஏதேதோ பெயர் வைக்கிறாயே! இதற்காகவா உன்னிடம் சொன்னேன்?" என்றார்.

நான் பொய்க் கோபத்தை வரவழைத்துக் கொண்டு, "எனக்குப் பெயர் வைக்கத் தெரிந்தால்தானே? நீங்களே உங்கள் பெண்ணுக்கு அழகான பெயராக வையுங்களேன்! யார் வேண்டாம் என்றார்கள்?" என்றேன்.

"சரி, நான் அவளுக்குப் பெயர் வைத்தால் நீ கோபித்துக் கொள்ளமாட்டாயே!"

"எனக்கென்ன கோபம்?" என்னை விட்டால் சரி! — ஆமாம், என்ன பெயர் வைக்கப்போகிறீர்கள்?" என்றேன்.

அவர் சில நிமிஷங்கள் என்னையே உற்றுப் பார்த்துவிட்டு, பிறகு ஒரு முடிவுக்கு வந்து விட்டவர்போல, "இவளுக்கு 'வித்யா குமாரி' என்று பெயர் வைத்து விட்டால் என்ன?" என்று கேட்டார்.

என் இதயத்தில் யாரோ பலம் கொண்ட மட்டும் ஓங்கிக் குத்தியது போலிருந்தது. சிறிது நேரம் கழித்து, "இந்தப் பெயர் ரொம்ப அழகாக இருக்கிறதோ? அசட்டுப் பிசட்டு என்று ஏதாவது பெயரைச் சொல்லுவது? 'ஆஹா—ஹோஹோ' என்று ஒரேயடியாகத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு கூத்தாடுவது! இதுதான் புருஷர்களின் சுபாவம்!" என்றேன்.

அவர் 'டை' கட்டி முடித்துக் கொண்டு, என்னருகில் வந்து என் தோள்மீது கை வைத்த வண்ணம், "ரூபா, நான் வித்யா சங்கரின் ஞாபகார்த்தமாக இவளுக்கு இந்தப் பெயர் வைக்க விரும்புகிறேன். அவன் எனக்கு ரொம்ப உபகாரங்கள் செய்திருக்கிறான். என் ஆப்த நண்பன். தடுக்காதே!" என்றார்.

நான் அவரை மேஜையின் அருகிலேயே ஒரு நாற்காலியில் உட்காரவைத்தேன். பிறகு நானும் அவர் பக்கத்திலேயே நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு, குழந்தையைத் தோளில் சாத்தித் தட்டிக்கொடுத்தவாறே, "அவர் என்ன அப்படி உபகாரம் செய்துவிட்டார்? ஒன்றுமே செய்யவில்லை. பார்க்கப்போனால் நீங்கள்தான் அவருக்கு



செட்டியார்:—என்னங்க! போன மாசம் வீட்டுக்குப் போய் அனுப்பறேன்னுட்டு ஒரு பத்து ரூபாய்க்குச் சாமான் வாங்கிக்கிட்டுப் போனீங்களே, அதை இன்னும் அனுப்பவே யில்லையே?

ஐயர்:—நல்லாக் கேட்டீங்க, நான் தான் இன்னும் வீட்டுக்கே போக வில்லீங்களே!

ரொம்ப ரொம்ப உபகாரம் செய்திருக்கிறீர்கள். இப்பொழுதும் அவருடைய தாயாரைப் போஷித்து வருகிறீர்கள்!" என்றேன்.

"இல்லே, ரூபா! அவன்தான் எனக்கு உயிர்ப் பிச்சை அளித்தான்; உன் அன்பைத் தந்தான்; என் மதிப்பையும் மரியாதையையும் உயர்த்தினான். அவன் செய்த உபகாரங்களுக்குப் பிரதி உபகாரம் செய்ய எனக்குச் சக்தி ஏது?"

என் உள்ளத்தில் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது. அவருடைய கண்களில் என் கண்களைப் புதைத்து, "என்ன, உயிர்ப் பிச்சை, என் அன்பு, மதிப்பு மரியாதை என்று என்னவெல்லாமோ சொல்கிறீர்களே! எனக்கு ஒன்றும் புரியவில்லையே!" என்றேன்.

அவர் தம் வாயிலிருந்து தெரியாத்தனமாக இப்படி வார்த்தைகள் வெளிவந்து விட்டனவே என்று வருந்தினார். 'நாம் மூடி மூடி வைத்துக் கொண்டிருந்த விஷயத்தை உணர்ச்சி வேகத்தில் இப்படிக் கொட்டி விட்டோமே, இனி இதை எப்படி மறைப்பது? இவளாகவே கேட்காமல் விட்டுவிட மாட்டாளா' என்று எண்ணி, 'என்னைக் கேட்காதே' என்று யாசிப்பவர்போல என்னைப் பார்த்தார். ஆனால் நான் அவரை விட்டால்தானே? "சொல்லுங்கள், இல்லாமற் போனால் இன்று கம்பெனிக்குப் போகவே விட மாட்டேன். நான் எப்பொழுதாவது உங்களிடம் ஒரு விஷயத்தை மறைத்ததுண்டா? நீங்கள் மட்டும் என் என்னிடம் மறைக்கிறீர்கள்? வேண்டுமானால் என் மீது நம்பிக்கை இல்லை என்று சொல்லிவிடுங்கள்; நான் உங்களைக் கேட்கவில்லை. இப்படி இரண்டும் கெட்டானாக இருப்பது எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை!" என்றேன்.

"கேட்டு விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பாய் போலிருக்கிறதே!"

"நானோ, நீங்கள் தொட்டுத் தாலி கட்டிய பெண்டாட்டி. என்னிடம் ஏன் இப்படி ஒளிக்கிறீர்கள்? 'அவர்' உங்களுக்கு உபகாரம் செய்திருக்கிறார்; உயிர்ப் பிச்சை அளித்திருக்கிறார்; மரியாதையைக் காப்பாற்றி யிருக்கிறார்! அப்படிப்பட்ட குணவானுக்கு நானும் ஒருவிதத்தில் கடமைப்பட்டிருக்கிறேன் அல்லவா? நீங்கள் சொல்லவில்லை என்றால், என்றைக்காவது ஒரு நாள் அவரைக் காண நேரிட்டு நான் என் நன்றியை அவருக்குத் தெரிவிக்காமல் இருந்து விட்டால் அவர் தம் மனதில் என்ன எண்ணிக் கொள்ளுவார்? 'இவளுடைய கணவனுக்கு நான்தான் உயிர்ப் பிச்சை அளித்தேன். இவள் கொஞ்சமாவது பொருட்படுத்தினாளா, பார்! நன்றி கெட்டவள்' என்று என்னை மனத்துள் இகழ மாட்டாரா? சீக்கிரம் சொல்லுங்கள். உங்களுக்கும் நாழிகை யாகிவிட்டது" என்றேன்.

"நான் சொல்லத் தயார்தான். ஆனால் அதைக் கேட்ட பிறகு நீ என்னை வெறுக்க ஆரம்பித்துவிட்டால்......?"

"நானாவது, உங்களை வெறுக்கவாவது? என்மீது உங்களுக்கு ஏன் இவ்வளவு வீண் சந்தேகம்?"

"என் வாழ்க்கையின் அந்த ரகசியச் சம்பவத்தை நான் உனக்குச் சொல்லச் சிறிதும் விரும்பவில்லை. ஆனால் நீயோ வெகு பிடிவாதம் பிடிக்கிறாய்! அதனால் சொல்லித்தான் ஆகவேண்டியிருக்கிறது. கேள்!" என்று அவர் ஆரம்பித்தார்.

## 12. தெய்வப் பிறவி

நான் ஒரு வேலையாளைக் கூப்பிட்டுக் குழந்தையை வெளியே எடுத்துக் கொண்டு போகும்படி சொல்லி விட்டு, அவர் சொல்லப் போவதை ஆவலுடன் கேட்கத் தயாரானேன்.

அவர் நாற்காலியில் நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு மெதுவான குரலில் சொல்ல ஆரம்பித்தார் —

"ரூபா, 'யுனிவர்ஸிடியில் முதலாவதாகத் தேறினால் உங்களைக் கல்யாணம் செய்து கொள்ளுவேன், இல்லாவிட்டால் முடியாது' என்று நீ என்னிடம் சொன்னாயே,



ஞாபக மிருக்கிறதா? அப்பொழுது நான் உன்னை அடைந்தே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டு இரவு பகல் எந்நேரத்திலும் புஸ்தகமும் கையுமாய் இருக்கலானேன் என்பதும் உனக்கு நினைவிருக்கும். நானோ பணக்காரக் குடும்பத்துப் பிள்ளை; சுகவாசி வேறு; எனக்கு அது ஒத்துக் கொள்ளவில்லை; ஜுரம் வந்து விட்டது. டாக்டர்கள், 'நீ இப்படி விழுந்து விழுந்து படித்தால் உடம்பு எதற்காகும்?' என்றனர். அப்பா அம்மாவும், 'படித்த படிப்பு போதும்; நிறுத்தி விடு!' என்றனர். ஆனால் அதற்கு நான் சம்மதிக்கவில்லை. ஆறிலும் சாவு, நூறிலும் சாவு. உன்னையும் இழந்து அவமானப்பட்டுச் சாரமற்ற வாழ்க்கை வாழ்வானேன் என்ற முடிவுக்கு வந்து விட்டேன். கஜகர்ணம் போட்டாலும் நான் முதலாவதாகத் தேற முடியாது என்பதை உணர்ந்திருந்தும், நான் நம்பிக்கையை இழக்கவில்லை.

"எங்கே பார்த்தாலும் ஒரே கும்மிருட்டு. வழி கண்ணுக்கே தெரியவில்லை; பயம் வேறு. இருந்தாலும் இருட்டில் சிக்கிக் கொண்ட மனிதன் 'வழி தட்டுப்பட்டு விடாதா?' என்று குருட்டாம் போக்கில் முன்னேறுகிறானல்லவா? அதே போலத் தான் நானும் என் வழியை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தேன்.

"இந்தச் சமயத்தில்தான் வித்யாசங்கர் எனக்கு உதவி செய்ய முன் வந்தான். இன்று ஆறு வருஷங்கள் ஓடி மறைந்து விட்டன. ஆனாலும் அந்தச் சம்பவம் இன்று நடந்தது போலவே என் மனக் கண்முன் நிற்கிறது. நான் 'காலேஜ் பார்க்'கில் புல்வாத் தரையில் உட்கார்ந்து புஸ்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு மண்டையை உடைத்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது வித்யாசங்கர் என்னருகில் வந்து உட்கார்ந்து, 'என் அப்பா, இப்படி உயிரை விடுகிறாய்?' என்று கேட்டான். நான் கஷ்டங்களை மறைக்காமல் அவனிடம் சொன்னேன். ஒன்று, 'பரீக்ஷையில் முதலாவதாகப் பாஸ் செய்வது; இல்லை அந்த முயற்சியில் உயிரையே விட்டுவிடுவது என்று இருக்கிறேன்' என்பதையும் அவனிடம் தெரிவித்தேன். இதைக் கேட்டு அவன் மிகவும் வருந்தினான். நான் காலேஜில் அவனை அவமானப்படுத்தினேன்: திட்டினேன்; எவ்வளவோ தீங்கும் அவனுக்கு இழைத்திருக்கிறேன். இவ்வளவையும் மறந்து அந்த உத்தமன், 'என்னை இந்தச் சங்கடத்திலிருந்து எப்படித் தப்புவிக்கலாம்' என்பதைப் பற்றி யோசித்தான். கடைசியில் அவன் 'இந்தப் படிப்பை விட்டுத் தொலை! நான் உன்னை முதலாவதாகத் தேறும்படி செய்து விடுகிறேன்' என்று சொன்னான். 'அது எப்படி முடியும்?' என்று நான் அதிசயமுற்றேன். 'நீ உன் பரீக்ஷை புத்தகத்தில் என் பெயரை எழுதி விடு; நான் என்னுடைய பரீக்ஷை புத்தகத்தில் உன் பெயரை எழுதி விடுகிறேன்' என்றான். என் மனம் இதற்கு ஒப்பவில்லை. என் அந்தராத்மா என்னையே சிரித்தது. ஆனால் நான் உன்மீதுள்ள ஆசையினால் மதிமயங்கி, அவன் சொன்ன உபாயத்தை ஒப்புக் கொண்டு விட்டேன். அந்த ரகசியம் இன்றுவரை என்னையும் வித்யாசங்கரையும் தவிர வேறு மூன்றாம் பேருக்குத் தெரியாது. இன்றும் அந்தச் சம்பவத்தை நினைக்கும்பொழுது என் தலை வெட்கத்தினால் தானாகவே தொங்கி விடுகிறது. அவன் மட்டும் இந்தத் தியாகத்தைச் செய்யாமல் இருந்தால் அவனுக்கு உன் அன்பு, மதிப்பு, புகழ் எல்லாம் கிட்டியிருக்கும். ஆனால் என் பொருட்டு அவன்



எல்லாவற்றையும் தியாகம் செய்து விட்டான். அவனைப் போல் நண்பனுக்காகத் தன் சுக போகங்களைத் தியாகம் செய்யக் கூடிய மனிதன் இந்தச் சுயநலக்கார உலகத்தில் ஏது? வஞ்சகமாகப் பேசி சமயம் வாய்க்கும்போது சிநேகிதனை ஏமாற்றும் ஆட்கள்தானே இந்த உலகில் அதிகமாயிருக்கிறார்கள்? ஆகவே, அவனை நினைக்கும் பொழுதெல்லாம் என் மனம் என்னையே நிந்திக்கிறது. உண்மையில் அவன் மனிதன் அல்ல; தெய்வப் பிறவி என்றுதான் சொல்ல வேண்டும். நான் ஒரு மிருகம்; மிருகத்திலும் கேடு கெட்டவன்! அவன் இப்பொழுது எங்கே யிருக்கிறானோ? யார் கண்டது?... அவன் மட்டும் அகப்பட்டு விட்டால் நான் அவனைக் கைநழுவ விடவே மாட்டேன். கண்ணிமை போலப் பாது காப்பேன்!" என்றார்.

அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகிக் கன்னத்தை நனைத்தது. தியாகமும் வீரமும் ததும்பிய இந்த உணர்ச்சி மிகுந்த கதையைக் கேட்டு என் உடல் ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்து விட்டது. 'வித்யா சங்கர் மிகவும் யோக்கியர்; கெட்டிக்காரர்' என்றுதான் இன்றுவரை எண்ணி யிருந்தேன். ஆனால் 'அவர் இவ்வளவு வீர புருஷராகவும் மகானாகவும் இருப்பார்' என்ற எண்ணம் இதுவரை என் உள்ளத்தில் எழுந்ததே இல்லை. அந்தக் காலத்தில் அவர் மீது நான் கொண்டிருந்தேனே, அந்த அன்பு மனத்தின் ஒரு மூலையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தது. அமரத்துவம் வாய்ந்த இந்த உணர்ச்சி யூட்டும் சம்பவத்தைக் கேட்டு, அது விழித்து எழுந்து விட்டது. உடனே என் உள்ளம், 'அவரை இனி அடைவது ஏது?' என்று ஏங்க ஆரம்பித்து விட்டது.

"அந்த உத்தமரைக் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் மனதுக்கு நிம்மதி யாவது ஏற்பட்டிருக்குமே! அவருடன் சாதாரணக் குடிசையில் வசிப்பதும், அரண்மனையில் வாழும் சுகத்தை அனாயாசமாகத் தருமே! பசியினால் வாடினாலும் அவருடைய இன்ப முகத்தைக் கண்டு பசியை மறந்து வாழலாமே! பறவைத் தம்பதிகள் போல அவருடன் ஆடிப் பாடிக் கொண்டு எளிய ஆனந்த வாழ்க்கை நடத்தி யிருக்கலாமே!" என்ற எண்ணங்கள் கொஞ்ச நஞ்சம் இருந்த என் மன நிம்மதியையும் கலைத்து விட்டது. (தொடரும்)

